உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-36 & 37
துன்முகி-ஆனி-15
28-6-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

## நற்றிணை - தெளிவுரை

### பாலை

தலைவன் பொருள்வயிற் பிரிவானென்பதைக் குறிப்பாலறிந்து வருந்திய தலைவியைத் தோழி தேற்றியது-

உலவை யோமை யொல்குநிலை யொடுங்கிச், சிள்வீடு கறங்குஞ் சேய்-நாட் டத்தந், திறழ்புரி கொள்கையோ டிறந்து செயினல்ல, தரும் பொருட் கூட்ட மிருந்தோர்க் கில்லென, வலியா நெஞ்சம் வலிப்பச் சூழ்ந்த, வினையிடை விலங்கல போலும் புனைசுவர்ப், பாவை யன்ன பழிதீர் காட்சி, யையேர்ந் தகன்ற வல்குல் மைகூர்ந்து, மலர்பிணைத் தன்ன மாயிதழ் மழைக்கண், முயல்வேட் டெழுந்த முடுகுவிசைக் கதநாய், நன்னுப் புரையுஞ் சீறடிப், பொம்ம லோதிப் புனையிழை குணனே. 252.

:-அம்மெய்யனார்.

சுவரில் அழகுபொருந்த எழுதிய பாவைபோன்ற குற்றந்தீர்ந்த காட்சியையும் மெல்லியதாய்ப் பொருந்தி அகன்ற அல்குலையும் மைதீட்டப்பெற்று நீலமலரைப் பிணைந்தாற்போன்ற கரிய இதழ்களையுடைய குளிர்ந்த கண்ணையும் முயலை வேட்டெழுந்த விரைந்த செலவையும் சினத்தையுமுடைய நாயினது நல்ல நாவையொத்த சிறிய அடிகளையும் செறிந்த கூந்தலையும் புனைந்த கலன்களையுமுடைய இவளுடைய கண்கள், ஓமை மரத்தினது பட்ட கிளைகளுள் தங்கி மறைந்து சிள்வண்டுகள் ஒலிக்கின்ற வேற்றுநாட்டிற்குச் செல்லும் நெறியில் இவ்வாறு செல்வோமென்னுங் குறிக்கோளுடன் சென்றிருந்து பொருள் சேர்த்தாலல்லது வீட்டிலே கவலையுடன் மனமடிந்திருந்தவர்க்கு அரிய பொருட்சேர்க்கை இல்லையாகுமென்று உடன்பட்டெழாத நெஞ்சம் ஒருப்படத் தலைவர் தொடங்கிய செயலிற் குறுக்கிட்டுத்தடுத்தில போலும்.

:- பாலகவி

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

மண்ண கத்திலும் வானிலு மெங்குமாம்
திண்ண கத்திரு வாலவா யாயருள்
பெண்ண கத்தெழிற் சாக்கியப் பேயமண்
தெண்ணர் கற்பழிக் கத்திரு வுள்ளமே.

:ஆளுடைய பிள்ளையார்

உரை:- 'மண்ணகத்திலும் - இந்நிலவுகத்திலும், வானிலும் - மேலுலகத்திலும், எங்கும்ஆம் - மற்றெல்லா இடங்களிலும் நிறைந்து, திண்ணகம் - மாற்றுரால் அழிக்கமுடியாத வலிய அரண்களையுடைய, திருவாலவாயாய் - திருவாலவாயில் எழுந்தருளி யிருக்கின்ற பெருமானே, பெண்ணகத்து - பேதைமையுடைய மனம் படைத்த, எழில் - வெளிப்பகட்டினாகிய. சாக்கியப் பேயமண் தெண்ணர் - சாக்கியரோடு கூடிய பேய்க்குணமுடைய சமணச் சாமர்த்தியகாரரது, கற்பு அழிக்க - கற்பனைகளை அழிக்க, திருவுள்ளமே - திருவுள்ளம் இசைவை வழங்குகின்றதா? அருள் - அருள்செய்வாயாக என்பதாகும்.

திருஞான சம்பந்தப் பெருமான் இந்நிலவுகத்தில் தோன்றியருளியது, அந்நாளில் இங்கே பரவியிருந்த பொய்ச்சமய நீக்கமும் மறைந்திருந்த மெய்ச்சமய ஆக்கமும் செய்தல் வேண்டுமென்றஆண்டவனின் திருவுளக் குறிப்பினுலேயாகும் இதனை அவரது வரலாறு கூறவந்தசேக்கிழார்பெருமான் பல இடங்களில் வலியுறுத்திச் செல்லுகிறார்.

அவம்பெருக்கும் புல்லறிவின்
அமண் முதலாம் பரசமயப்
பவம் பெருக்கும் புரைநெறிகள்
பாழ்பட நல்லூழி தொறும்,
தவம்பெருக்கும் சண்பையிலே
தாவில்சரா சரங்க ளெலாம்
சிவம்பெருக்கும் பிள்ளையார் திரு
வவதாரஞ்செய்தார் என்ற அவ

ரது திருவாக்கு இங்கே நினைவு கூரத் தக்கதாகும். பொய்மையை அகற்றி மெய்மையை நிலைநாட்டத்தோன்றிய அவர் அது செய்யுங்கடமையில் வழுவாது நின்ற பெருந் தகைமையை நினைந்து போற்றுதல் வேண்டும்.

உள்ளத்தோடு ஒட்டாத ஒழுக்கங்களை யுடையவர்களாய்ச் சமணர்கள் அந்தநாளில் பாண்டிய நாட்டில் வாழ்ந்தார்கள், புறத்தே சீவகாருணியம் போன்ற நல்லொழுக்கங்களை உடையவர்கள் போல நடித்து வந்த அவர்கள் அகத்தே ஈரமென்பது எள்ளளவும் இல்லாதவர்களாய்த் தமது சமயக்கொள்கையை மறந்து தீயசெயல்களில் தலைப்பட முற்பட்டார்கள்.

களையானது பயிருக்கு இடையூறு செய்யாமல் வயலல்லாத மற்றை இடங்களில் இருக்குமானால் அதனைப் பிடுங்கி யெறிதல் வேண்டுமென்ற எண்ணம் யாருக்கும் வராது. பயிரை மேய்கின்ற களையை வாளா விட்டுப் பார்த்துக் கொண்டிருப்பது, கடமையுடைய உழவனுக்குமுடியாத வொன்றாகும். எங்கேயோ நெடுந்தொலைவிலிருந்த சமணக் களை, பாண்டியநாட்டிற்படர்ந்து சைவப்பயிரை யெடுக்கித் தழைத்துவிட்டது.

பயிரின் உயர்வை யறியாது களையின் பசுமைகண்டு மயங்கிய ஏழைஅறிவாளர்களில்ஒருவனாக அரசனும் ஆகிவிட்டான். அவனது மனைவியாகிய மங்கையர்க்கரசியும் அமைச்சராகிய குலச்சிறையாரும் மட்டும் தக்க இன்ன தகாதன இன்னவென்று ஒக்க உன்னும் உயர்மதியுடையராய் அங்கே யிருந்தனர். அவர்களது முயற்சியால் ஆளுடைய பிள்ளையார் மதுரைக்கு வந்தார். வஞ்சகமே வடிவமாய் அங்கு வசித்த சமணர்கள் ஞானசம்பந்தப் பெருமானைக் கண்டு பொறாமை கொண்டு, அவர் தங்கியிருந்த திருமடத்தில் தீ வைத்து அவரையும்உடனிருந்த பதினாறாயிரம் அடியார்களையும் ஒரு நொடியில் இல்லையாகும்படி செய்ய முயன்றார்கள்.

நீற்றுச் சாதனமுடைய திருஞானசம்பந்தப்பெருமானிடத்து நெருப்புச் சாதனமுடைய சமணர்கள் முயற்சி எங்ஙனம் பயன் தரும்? பிறரைச் சுடுவதற்கு அவர்கள் கைக்கொண்ட தீச்சுடர் அவர்கள் தலைவனாகிய பாண்டியனையே சுடத் தொடங்

கியது. அறியாமை மிக்க சமணர்களின் வேகம், ஆளுடைய பிள்ளையாருக்கும் இருந்திருந்தால், பாண்டியனிடம் மீண்டு பற்றிய தீச்சுடர் அவனைக் கொன்றே யிருக்கும். அருட்கடலாகிய ஆளுடையபிள்ளையின் கட்டளைக்குக் கட்டுப்பட்டே அது வெப்புநோயாகப் பையப் பாண்டியனிடம் சென்றது.

அந்நோயை நீக்குதற்குச் சமணர்கள் மேற்கொண்ட எந்தச் செயலும் பயனளிக்கவில்லை. அந்தவேளையில் ஞானசம்பந்தர் அழைக்கப்பெற்றார். அவரால் அரசன் நோய் நீங்கினான். அனல் வாதம் புனல் வாதங்கள் நிகழ்ந்தன. எல்லாவற்றிலும் தோற்ற அமணர்கள் மானம் பொறுது கழுவிலேறினர்கள்.

'தீயாரைக்காண்பதுவும் தீது' என்னுங் கொள்கையுடையராய்ச் செம்மைக்கு இருப்பிடமாகிய நம் நாட்டில் தொன்றுதொட்டு மக்கள் வாழ்ந்து வருகிறார்கள். நோக்கிட விதியில்லாதாரை நோக்கி வாது செய்ய வேண்டிய இன்றியமையாமை ஞானசம்பந்தருக்கு ஏற்பட்டபோது, அதனைச் செய்ய ஆண்டவனிடம் அநுமதி கேட்டார்.

'செய்வானும் செய்வினையும் அதன்பயனும் சேர்ப்பானும்' என்று வினையின் பயனாக விளைகின்ற செயல்களுங் கூட இறைவன் செய்விக்க நாம்செய்கின்றோமென்பதைச் சைவ சித்தாந்தம் உணர்த்துகின்றது. அருளாலேயே தோன்றி, அதனாலேயே வாழ்ந்து அவ்வருளாலேயே செயல்கள் செய்து வருகின்ற ஆளுடைய பிள்ளையார் 'அவனை யகன்று எங்கின்றும்' என்ற பேருண்மைப்படி ஆண்டவனிடம் அநுமதி கேட்டபொழுது பாடியருளிய பதிகத்தின் மூன்றுவது திருப்பாடல் மேலேயிருப்பதாகும்.

இறைவனது நிறைவு எங்கும் பொருந்தி யிருக்கிறது. அது பசுவின் உடம்பு முழுவதிலும் பால் நிறைந்திருப்பது போன்றது. அவன் ஆலவாயில் விளங்கித் தோன்றுவது. பசுப் பால் முலைப்பால் விம்முவதுபோன்றது. இறைவனது எங்கும் நிறைந்த இயல்பே அவனது எல்லாம் அறியும்பேறிவுக்கு அடிப்படையாயிருந்து பயன் தருகின்றது. முற்றறிவுடைய அவனலன்றி மற்றெவராலும் எதிர்காலமுடிவை அறிந்துணர்த்த முடியாததலால், அம்முற்றறிவுக்கு அடிப்படையாக விளங்குகின்ற முற்றுநிறைவை யுடையவன் திருவாலவாயானென்று முன்னர்க் குறித்தார்.

அறிவில் நான்கு மடங்கு சிறந்த அப்பெண்களைப் பேதைகளென்று பேசுவது, பழங்காலந் தொட்டு நிகழ்ந்து வருகின்றது- இதற்குரிய காரணத்தைச் சிந்தித்தாலன்றி அறிய முடியாது. பேதைமை என்ற சொல் அறியாமை என்ற பொருளில் வழங்கப் பெறுகின்ற தேனும் அதன் உண்மைப்பொருள் அறிவு மயக்கம் என்பதேயாகும். உறுதியில்லாது நிலையற்ற நிலையிலுள்ள அறிவு பெண்களுக்கு இயல்பாயமைந்தது என்பதைக் குறிக்கவே, பேதைமையுடையாரவர் என்று கூறினர். இதனை 'எண் சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும் பெண் சேர்ந்தாம் பேதைமை யில்' என்ற திருக்குறளாலும் 'வித்யதே ஸ்திரீஷு சாபல்யம்' என்ற வியாசபாரதத்தாலும் அறியலாம்.

அறிவால் நிரம்பப் பெற்ற பெண்ணாயினும் அவளுக்குப் பேதமை என்பது இயல்பாகவே அமைந்திருப்பதென்பதைப்புலப் படுத்துதற்கே பெண்களது ஏழு பருவங்களுள் முதற் பருவம், பேதைப் பருவமென்று குறிக்கப்பெற்றது.

இவற்றையெல்லாம் கூர்ந்து நோக்கினல் 'பெண்ணகம்' என்பது பேதைமை யுள்ளம் என்ற பொருளில் இங்கே பயிலப் பெற்றுள்ளது என்பது புலப்படும், எழில் அவர்களது தீயொழுக்கத்தை மறைத்தொழுகும் புறச் செயலைக் குறித்து நிற்கின்றது. புறஅழகை எழிலென்றும் அக அழகைத் தோற்றமென்றும் கூறுவது பண்டைச் சான்ருேர் மரபு.

கற்பு என்ற சொல்லுக்கு கல்வி, கற்பனை, நீதிநெறி, மகளிர் நிறை, மதிலுள் மேடை, மதில், முல்லைக்கொடி, முறைமை விதி, கதி என்பன வாதிய பொருள்களுண்டு. கல் என்ற பகுதியும் பு என்ற தொழிற் பெயர் விகுதியும் கூடி இச்சொல் உண்டாகியது

கணவனையன்றி மற்ற எவரையும் சேராத மகளிர் ஒழுக்கத்தைக் கற்பு என்று கூறுவது அச்சொல்லுக்குரிய பலவகைப் பொருள்களில் ஒன்ருகிய மகளிர் நிறைஎன்பதனுள்ளே அடங்கியிருக்கின்ற பல ஒழுக்கங்களில் ஒன்றேயாகும் இதனை 'காவல் தானே பாவையர்க் கழகு' என்று கூறிய ஔவையார் அதற்குமுன் வரியில் 'கற்பெனப்படுவது சொற் றிறம் பாமை' என்று சொல்லிக் கற்புக்குப்பொருள் விரிப்பதால் அறியலாம்

# தீச்சுடர்ச் சிற்றரசுக்குச் செவியறிவுறூஉ

பாலகவி

உண்மையுணராது கண்மூடித் தனமாக வசவுப்படலம் பாட முற்பட்ட மாட்சியினீர்! நுமது அறியாமைக்கு இரங்கி ஒதுங்கியிருப்பதே அறிவுடையாருக்கு அழகென்றாலும், நீரும் ஒரு இதழாசிரியராய் வெளிப்பட்டுவந்து நாட்டைச் சீர் திருத்தும் நற்பணியை மேற்கொண்டவர் போல நடிப்பதாலும், அறிவால் ஏழைமை பூண்ட ஒரு சிலர் நும் எழுத்தைப் பார்த்து மயக்கம் கொள்ளுவதாலுமே இந்த அறிவுரையை நும்பொருட்டாக வெளியிட வேண்டிய இன்றியமையாமை எமக்கு ஏற்பட்டுவிட்டது

நுமது 14-6-56 தீச்சுடர் வார இதழில் நீர் எழுதிய வெளடிகளார் என்ற தலையங்கத்தையும். பசும்பொன்னர் என்ற தலைப்பில் வந்துள்ளதையும் திரு, T. K. சீனிவாசன் எழுதிய கணைதொடுப்போர் கவனத்துக்கு என்ற தலைப்புடைய பிதற்றலையையும் படித்துப் பார்த்தோம்.

சிந்தனைச் சிற்பி என்ற பெயரைத் தேடிப்பிடித்துச் சூட்டிக் கொண்ட உம்மையும் உம்முடனிருப்போரையும் உமது வார இதழ் வழியாககண்டஎமக்கு 'குருடும் குருடும் குருட்டாட்டம் ஆடிக் குருடும் குருடும் குழிவிழுமாறே' என்ற எங்கள் திருமூலர் திருவாக்குக்குக் கண்காணும் சான்று ஒன்று உள்ளதே என்ற மகிழ்வு உண்டாகின்றது. உம்முடைய எழுத்திலிருந்து ஞானசம்பந்தப்பெருமானைப் பற்றி எள்ளளவும் தெரிந்து கொள்ளாத மடமை, ஏன்? தமிழ்ச் சொற்றொடர் எழுத அறியாத சிறுமை, உலகந் தெரியாத பேதைமை ஆகிய தகுதிகளில் நீர் முதலிடம் பெற்றிருக்கிறீர் என்பது தெற்றெனவிளங்குகின்றது.

ஞானசம்பந்தர் ஞானப்பால் உண்டதுமுதல், அவரது வாழ்க்

கையில் நிகழ்ந்த அருள் நிகழ்ச்சிகள் எதனையும் ஒப்புக்கொள்ளாத நீர் அவர் சமணர்களைக் கழுவேற்றினர் என்பதைமட்டும் எந்தச் சான்றுகொண்டு ஒத்துக் கொள்ளுகிறீர்?

பதினாயிரம் பேர் தங்கியிருந்த திருமடத்தில் அவர்கள் எல்லோரும் தூங்கிக்கொண்டிருந்த நள்ளிரவில் உம்மைப் போலத் தீச்சுடர்க் கொள்ளியைக் கையில் பிடித்துக்கொண்டு வந்து அத் திருமடத்தையே கொளுத்திச்சாம்பராக்க எண்ணிய பெருந்தகைமைஉடைய சமணர்கள் குற்றமற்றவர்களாக உமக்குப் புலப்பட்டதில் வியப்பொன்றுமில்லை.

ஞானசம்பந்தர்தான் கழுவேற்றினர் என்பதை நீர் ஆயிரத்துமுன்னூறு ஆண்டுகளுக்கு முன்னர் எங்கே-புல்பூடு முதலிய பிறப்புக்களில் எவற்றிலிருந்து கொண்டு பார்த்தீர்? அதைஎன் சொல்லாது விட்டீர். நூல்களில் சொல்லப் பெற்றனவற்றையெல்லாம் மறுத்து, நேரே அறிந்தவற்றையே ஒப்புக்கொள்கிறவர் நீராதலால் உம்மிடம் இப்படிக் கேட்டுத்தான் ஆகவேண்டியிருக்கிறது.

உலகத்திலே வாழுகின்ற ஒவ்வொருவரும் தங்களைக்கொண்டு தான் பிறரை அளப்பார்கள். திருடனுக்கு யாரைப் பார்த்தாலும் திருடனாகத்தோன்றுவதும், கொலைமுதலிய குற்றஞ் செய்தவர்களுக்கு அனைவரும் அக்குற்றம் செய்தவராகவே புலப்படுவதும் இயல்பு. ஞானசம்பந்தப் பெருமானை யோக்கியம்இல்லாதவர் என்று பொருள்தரும் சொல்லைக்கொண்டு குறித்த உம்மை மேற் கூறிய உண்மைகளை வைத்து யாம் அளந்தறிந்து கொண்டோம்.

திருஆலவாய் வேறு வேதாரணியம வேறு என்பதைக் கல்வி அறிவில்லாதாரும் அறிவர். நீர் பிறந்துவாழ்ந்துகொண்டிருக்கிறதமிழகத்தில்உள்ள திருவாலவாய்க்கும் வேதாரணியத்திற்கும்இடையில்நூற்றைம்பது கல் தொலைவு இருக்கிறது என்பதை, அந்தோ! சிந்தனைச் சிற்பியே! சிற்றரசே! முன்னேற்றக்கழகக் குஞ்சே! தீச்சுடர்க் கனலே! நீர் அறியாதது பள்ளிப்பிள்ளைகளுக்கும் பரிகாசத்துக்குரியதாய் இருக்கிறதே என்று இரங்குகிறோம்.

இன்னும் எத்தனையோ வகைகளில் துன்புறுவதற்காக

வாழ்ந்துகொண்டிருக்கும் நீர் இன்பத்தையே தருவதாகிய திருஞான சம்பந்தர் தேவாரத்தைத் தொட்டுப் பார்க்கவும் யோக்கியதை இல்லாதவர் என்பதை அறிஞர் உலகம் அறியும். அதனை மற்றையோர் உலகமும் அறிய வேண்டுமென்பதற்காகத்தான் 'மண்ணகத்திலும்' என்ற திருப்பாசுரத்தைப் பல ஆயிரக்கணக்கான தேவாரப்புத்தகங்கள் அச்சாகி வெளிவந்திருந்துங்கூடப் புத்தகத்தைப் பார்த்துப் பிழையில்லாமல் எழுதி உமது வார இதழில் வெளியிட உமக்கு மதி இல்லாது போயது போலும்?

சைவ விரரும் நேர்மைக்கு இலக்கியமாய் நிற்பவருமாகிய பசும்பொன் முத்துராமலிங்கத் தேவருக்குப் புரியவைக்கக் கிளம்பிய உமது உலக்கைக் கொழுந்துப்புத்தி உலகத்தார் எள்ளனத்திற்கு உரியதாகிவிட்டதே! எழுவயது நிரம்பப்பெறாத இளங்குழந்தை பெண்களின் கற்பழிக்க வரங்கேட்டதென்று சொல்ல முற்பட்ட உமது அறியாமைதான் உலகத்தில் உயர்ந்ததாக இருக்கமுடியும். மண்ணகத்திலும் என்ற திருப்பாசுரத்துக்கு உண்மையான பொருள் தெரிந்துகொள்ள வேண்டுமென்றால் நமது இவ்வார இதழில் பசுந்தமிழ்மலர்க் கட்டுரையைப் படித்து அறிந்துகொள்வீராக.

சாக்கியப்பெண்களின்கற்பை அழிக்க ஞானசம்பந்தர் வரங் கேட்டாரென்று பாட்டுக்குப் பொருள் கண்டு, உமது தமிழறிவைத் தீச்சுடரில் கொழுந்துவிட்டெரியச் செய்தமைக்கு நன்றி.

ஓலையை மீன்வாலில் கட்டி ஞானசம்பந்தர் விட்டதாக நீர் சரடுவிட்டதல்லாமல், அவரைச் சுரடுவிட்டாரென்று வாய் கூசாது சொல்லத் துணிந்தீரே! ஞானசம்பந்தர் ஓலையைக் கட்டுவதற்கு மீனைப்பிடித்து அவர் கையிற் கொடுத்ததும், அது நீரை எதிர்த்தே பத்துமைல் தூரம் செல்லவேண்டுமென்று அதற்கு உபதேசம் செய்ததும் நீர்தான்போலும்? அவ்வாறு உம்முடைய உபதேசத்தைக்கடவாது எதிர்த்தே சென்ற அம் மீனுக்கு நீர் பல்லாற்றானும் நன்றி செலுத்துவீராக.

பாண்டியனுக்குச் சூலைநோய் இருந்ததென்று எங்கே கண்டு பிடித்தீர்? அதை ஞானசம்பந்தர் தீர்த்தார் என்று யாருமக்குச்சொன்னது? பாண்டியனது சூலைநோயை ஞானசம்பந்தர் தீர்த்தாரென்று சொல்லுகிற நீர் அவர் அதை, எப்பொழுது

எப்படித் தீர்த்தார்? அப்படித் தீர்த்ததில் ஏதாவது வியப்புண்டா? என்பதைச் சொல்லாது விட்டுவிட்டீரே!

குலச்சிறையாரை நாயனார் ஆக்கிய ஞானசம்பந்தர் வேறு யார் யாரை நாயனாராக்கியிருக்கிறார்? புனுகுபூனைக் கூண்டில் நாயை அடைத்து வைப்பதனால் அது புனுகு பூனையாகுமா? நாயனாராகுந்தகுதி, நீர் நினைக்கிறபடி பகரும் பட்டம்பெறுவோர்களின் தகுதி போன்றதல்ல என்பதை இனியாவது உணர்ந்து கொள்ளும்.

சுபாஷ் சந்திரபோஸை முக்கண்ணில் ஒருகண்ணைத் திறந்து தேடும்படி சிவபெருமானிடம் கேட்கச்சொல்லுகிறீர். நீரும் உமது தொட்டொட்டிகளும் இங்கே பிறப்பதற்கு முன்பிருந்தே, உம்போன்றோர்கள் முகத்தில் விழிப்பதற்கு வருந்தி எங்கள் சிவபெருமான் உங்களுக்குப் புலப்படாத நெடுந் தொலைவிலே தங்கிவிட்டார். அதனாலே தான் நீர் சொல்லுகிறபடி அவரிடம் வரங்கேட்க நாங்கள் விரும்பவில்லை. இது உமது மூளையில் ஏறுவதற்கு ஒரு சமாதானம். புரிந்ததா?

மூன்றாண்டில் யாராலும் நினைத்தற்கரியதும், செய்தற்கரியதும் சொல்லற்கரியதுமான கருத்து, செயல், உரை ஆகியவற்றை வழங்கிய ஞானசம்பந்தரைப்பலகாலும் பயிற்றிப் பயிற்றிப் பாட வைத்து அப் பயிற்சியாற் பாடிய பத்து வயதுச்சிறுமிக்கு உவமை கூறிய உங்கள் அறிஞரி ஆற்றல் அளவிடற்கரியதுதானென்பதிலும் ஐயமில்லை.

## பட்டமளிப்பு

மதுரைத் திருஞான சம்பந்த சுவாமிகள் மடாலயத்தில் 27-5-56ல் நடைபெற்ற ஸ்ரீ திருஞானசம்பந்த தேசிக சற்குருநாதசுவாமிகள் குருபூசை விழாவில் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களால் பட்டம் வழங்கப் பெற்றவர்கள் பெயர்களும் பட்டங்களும்:

1 கெ எம் வேங்கடராமையா 'சிவநெறிச்செல்வர்'
2 இராம கோவிந்தசாமிப் பிள்ளை: 'சித்தாந்தச் செம்மணி'
3 ரா பி சேதுப்பிள்ளை 'செந்நாப் புலவர்'
4 த ச மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை 'சித்தாந்தக் கலைஞர்'
5 ச தண்டபாணிதேசிகர் 'சித்தாந்தப் பேராசிரியர்'
6 பி டி எஸ் குமாரசாமிச்செட்டியார் 'சித்தாந்தக் காவலர்'

(12ம் பக்கம் பார்க்க)

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

துன்முகி ஆனி - 15

# சமய நிலைய நிதிகள்

சமயச் சார்பற்ற நம்முடைய பாரத அரசாங்கம் தனது அடிப்படைக் கோள்கைக்கு மாறாகப் பலவகைகளில் சமயநிலையங்களுக்கு ஊறு விளையும் முறையில் செயலாற்றி வருவது பெரிதும் வருத்தத்திற்குரியதாகும்.

சமயநிலையங்களின் பேராலுள்ள சோத்துக்களிலிருந்து வருகின்ற வருமானம் சமயத் திருப்பணிகளுக்கன்றி மற்ற எந்த வகைக்கும் பயன் படுவதேன்பது எவ்வாற்றானும் ஒவ்வாததும் போருந்தாததும் என்பதை யாவரும் உணருதல் வேண்டும்.

கோடிக்கணக்கான ரூபாய்களை விழுங்கிச் சென்ற முதலைந்தாண்டுத் திட்டம் சேலவுக்குத் தக்க பயனை அளிக்கவில்லை என்பதை நன்கு அறிந்தும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் வகுக்கப் பெற்று, அது செயல் முறைக்கு வந்திருக்கிறது. அதற்குத் தேவையான போருளைச் சேகரிப்பதற்கு' நமது மத்திய அரசாங்கம் சமயநிலையங்களின் சோத்துக்களில் கண் வைத்து விட்டது. இதையோட்டி அகில இந்திய அடிப்படையில் ஒரு சட்டம் வகுக்கவும் அது முயற்சி யெடுத்துக் கோண்டிருக்கிறதேன்று அறிகின்றோம்.

சமயநிலையங்களின் நிதிகளைப் பயன் படுத்திக்கோள்ளும் வகை

யில் வழிவகுக்கும் முயற்சிகளைக் குறித்து மாகாணஅரசாங்கங்களின் பிரதிநிதிகளைக் கொண்ட மகா நாடு ஒன்றைக் கூட்டப்போகிறார் களாம். ஒவ்வொரு மாகாணத்திலு முள்ள சமய நிலையங்களின் சொத்து விவரங்களைச் சேகரித்து மத்திய அரசாங்கத்திற்கு அனுப்பு வதற்குக் குழுக்களை ஏற்படுத்தப் போகிறார்களென்றும் தெரிகிறது.

பம்பாய் மாகாணத்தில் **5000** சமய நிலையங்களுக்குச் சொந்த மான **91**கோடி ரூபாய் மதிப்புள்ள சொத்துக்களின் ஆண்டு வருமா னம் ஏறக்குறைய **7**கோடி ரூபாய் என்பது அம்மாகாணம் சேகரித்த புள்ளி விவரமாகும். இதைப்பார்த்த பிறகுதான் அரசாங்கம் மற்ற மாகா ணங்களின் சமய நிலையங்களிலும் கண் வைக்கத் தொடங்கியிருக்கி றது.

சமய நிலையங்களின் சொத்துக் களை அநாதைச் சொத்துக்களாகக் கருதி அரசாங்கம் அவற்றைப் பயன் படுத்திக்கொள்ள நினைப்பது ஒரு குழப்பமான நிலைமையைத் தாங்களே தேடிக்கொள்வதாகு மென்று எச்சரிக்க விரும்புகிறோம்.

தனது நிதியிலிருந்து பல லட் சக்கணக்கான பொருளைச் செல விட்டுப் புத்தர் விழாக்கொண்டா டிய இந்திய அரசாங்கம் கிறித்தவ-மகம்மதியச் சமய நிலையங்களின் சொத்துக்களையும் தங்கள் கண்கா ணிப்புக்குக் கொண்டு வந்தால், அதனுடைய வீரச்செயல் அனைவ ராலும் பாராட்டப்பெறும்.

அடாபிடிக்கு அஞ்சும் இயல்பு டைய வைதிக சமயத்தாரை மட் டும் ஏமாற்ற நினைக்கும் இந்திய அரசாங்கத்தின் போக்குக்கு நாம் என்ன செய்ய வல்லேம்?

## செங்கோல் ஆதீனம் கூட்டு வழிபாடு

பெருங்குளம் ஜூன் 11-ஆதீன. சிர்வாகத்திலுள்ள ஸ்ரீ திருவழுதீஸ்வர சுவாமி தேவஸ்தானத்தில் தேவார பாட சாலை. மாணவ மாணவிகள். தேவாரதிருவாசகம்.பாராயணம் செய்து சமயச்சொற்பொழிவும் செய்தனர். சிவபுராணம். பாடிச் சுவாமி அம்மன் சந்நிதியில். கற்பூர ஆராதனைசெய்யப்பட்டுப் பிரஸாதம் வழங்கியபின் கூட் டம் இனிது முடிந்தது.

(9ம் பக்கத்தொடர்ச்சி)

7 அ க இராசகோட்டியப்பன் 'திருநெறிப்புலவர்'
8 ருத்ராபதி 'சைவத் தமிழ்மணி'
9 வெள்ளைவாரணம் 'திருமுறைத் தமிழ்மணி'
10 ஜி சுப்பிரமணியபிள்ளை 'சைவப் பேராசிரியர்'
11 கி வா ஜகந்நாதன் 'திருநெறித் தவமணி'
12 பவானி கண்ணப்பர் 'திருமுறைமணி'
13 ந சேதுரகுநாதன் 'செந்தமிழ் ஞாயிறு'
14 அ முத்துசாமிப்புலவர் 'செந்தமிழ்ச்செல்வர்'
15 மீ கந்தசாமிப்புலவர் 'செந்தமிழ்ச் செம்மணி'
16 பசும்பொன் உ முத்துராம லிங்கத்தேவர் 'சன்மார்க்க சண்டமாருதம்'
17 அ க நவநீதகிருஷ்ணன் 'செஞ்சொற் புலவர்'
18 வித்துவான் சிவக்கொழுந்து 'திருமுறைச்செம்மணி'
19 ம பாலசுப்பிரமணிய முதலியார் 'திருமுறைத்தவமணி'
20 அருணைவடிவேலு முதலியார் 'சித்தாந்தக்கலைமணி'
21 ஆ சிவலிங்கனர் 'சிவநெறிப் புலவர்'
22 மறை திருநாவுக்கரசு 'திருமுறைச்செல்வர்'
23 கெ பி கே ரத்தினம் 'செந்தமிழ்க்கலைமணி'
24 கிரிதாரி பிரசாத் 'செஞ்சொற் சண்டமாருதம்'
25 கெ எம் பாலசுப்பிரமணியம் 'செஞ்சொற் பாவலர்'
26 தொ மு பாஸ்கரத்தொண்டமான் 'காவியக் கலைஞர்'
27 எஸ் மகாராச பிள்ளை 'திருமந்திரமணி'
28 பட்டுசாமி ஓதுவார் 'திருமுறைக் கலைஞர்'
29 முத்து சு மாணிக்கவாசக முதலியார் 'சித்தாந்த சிரோன்மணி'
30 வீர சிவசுப்பிரமணியம் 'சித்தாந்த சைவப்புலவர்'
31 காருகுறிச்சி பி அருணுசலம் 'கந்தருவ கான சுரமணி'

---

## சேக்கிழார் திருநாள்

தேவகோட்டை ஜூன் 15-சேக்கிழார் திருநாட் கழகத்தின் பத்தாவது ஆண்டுவிழா முருகவேள் சதுக்கத்தில் அமைக்கப்பெற்ற விழாப்பந்தலில் 10-6-56 மாலை 4மணியளவில் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடம் இளவரசு வித்துவான் ஸ்ரீலஸ்ரீ மகாலிங்கத்தம்பிரான் சுவாமிகள் அவர்கள் தலைமை

யில் நடைபெற்றது. அவ்வமயம் V. சரசுவதி (மதுரை) திருமுறை ஓதினர். கழகஅமைச்சர் பாலகவி வே இராமநாதன் செட்டியாரவர்கள் எல்லோரையும் வரவேற்று தலைவருக்கு வரவேற்புமடல் வாசித்துக் கொடுத்துச் சென்ற ஆண்டின் அறிக்கையைப் படித்தார்கள்.

தலைவர் முன்னுரைக்குப் பின் முறையே 'சேக்கிழார் பெருமான்' என்ற தலைப்பில் செல்வி வயிநாகரம் இராம. மீனாட்சியும், 'எறிபத்தநாயனர்' என்ற தலைப்பில் வித்துவான் க. சேதுராமலிங்கமும், 'சேக்கிழார் காட்டிய திருத்தொண்டு' என்ற தலைப்பில் செஞ்சொற் சிங்கம் குலசை வீரசிவம் அவர்களும், 'குருபூசை' என்ற தலைப்பில் செல்வன் இராம. திருநாவுக்காசும், பேசினர்கள்,

இரண்டாம்நாள் (11-6-56) திரு சு ஆவுடையப்ப தேசிகரவர்களின் கடவுள் வாழ்த்துடன் கூட்டம் தொடங்கியது. 'சேக்கிழார் காட்டிய செந்நெறி' என்ற தலைப்பில் திரு தமிழ்முடியும், 'நமியந்தியடிகள்' என்ற தலைப்பில் திரு சு- இராசேந்திரனும் (மயிலம் கல்லூரி மாணவன்) 'சேக்கிழார் காட்டிய இறைநிலை' என்ற தலைப்பில் திரு. ஆறுமுக நாவலரவர்களும் பேசினர்கள்.

மூன்றும்நாள் முற்பகலில் நகரச்சிவாலயத்திலுள்ள அறுபான் மும்மை நாயன்மார், சமயச்சாரியர் சேக்கிழார் பெருமானுக்கு விசேட பூசை வழிபாடுகள் நிகழ்ந்தன. மாலை ஐந்து மணிக்குத் திருபொ தியாகராசபிள்ளை கடவுள் வாழ்த்துடன் கூட்டம் தொடங்கியது. 'சேக்கிழார் காட்டிய திணைவளம்' என்னும் தலைப்பில் பொம்மபுர ஆதீன வித்துவான் திரு சி. துரைசாமி ஐயரவர்களும், 'சேக்கிழார் காட்டிய துறவறம்' என்ற தலைப்பில் அண்ணமலைப்பல்கலைக்கழகப் பேராசிரியர் திரு ஜி சுப்பிரமணிய பிள்ளையவர்களும் 'சேக்கிழாரின் நிலநூற் புலமை' என்றதலைப்பில் மா சிவகுருநாத பிள்ளைய்வர்களும் பேசினர்கள். கழகஅமைச்சர் நன்றிகூற வாழ்த்துடன் விழாநிறைவெய்தியது. இரவு ஒன்பது மணிக்குச் சேக்கிழார் சுவாமிகளுடன் யானைமீது திருமுறை வீதியுலா சிறப்பாக நடைபெற்றது.

---

# சமணர்களைக் கழுவேற்றிய நிகழ்ச்சி என்றென்றும் நடைபெற வேண்டியதே.

—: தேவகோட்டை சன்மார்க்கசங்கத் தலைவர் அறிக்கை :—

தமிழகத்தின் கண்ணுள்ள சிவாலயங்களில் நடைபெறும் சித்திரைத் திருவிழாவில் சமணர்கள் கழுவேறிய நிகழ்ச்சியை உலக மக்கள் காட்சிரூபமாய்க்காணும் வண்ணம் கொண்டாடுவது வேதவேள்வியை நிந்தனை செய்துழல் ஆதமில்லியமணோடு தேரரைவாதில் வென்றழிக்கத் திருவுள்ளமே பாதிமாதுடனாய பரமனே ஞாலநின்புகழே மிக வேண்டுக் தென் ஆலவாயி லுறையுமெம்மாதியே என்று கோர்தல் திறத்தில் மறை பாடி அப்பண்ணிசைப் பாடல் ஒவ்வொன்றினும் பொய்யொழுக்கத்தையுடைய சமணர்களின் ஒழுக்கத்தை இகழ்ந்து கூறிய திருஞானசம்பந்தருடைய திருவுள்ளத்திற்கு எவ்வகையினும் முரண்பாடுடையதல்ல. ஆக்கற்றொழில் வல்லவராய் எலும்பைப் பூம்பாவையாக்கிய அவர் மெய்யன்பராம். அடியார்கள் திருக்கூட்டத்தை அப்படியே மடத்துடன் வெந்தொழியட்டும் எனவெண்ணித் தீயிட்டும்பொய் யொழுக்கங்களை மேற் கொண்டும் திரிந்த கூட்டத்தினரை வாதின் வென்று அழித்து மெய்யன்பர்களுக்கு என்றென்றும் ஆக்கம் பெருக அறநெறி தழைக்க அருளியது ஒன்னார்த் தெறலும் உவந்தாரை யாக்கலும் எண்ணில தவத்தால் வரும் என்ற மறைமொழிக்கு எடுத்துக்காட்டாய் உள்ள வுயர் தகுதியே யன்றித் தவறில்லை ஆக்க வல்லமையுள்ள அவர் அழித்தலும் செய்தலிற் றவறு என்ன? மயலறு மந்திரஞ் சிட்சை சோதிடாதி மற்றங்க நூல்வணங்க மௌன மோலி யயர்வறச் சென்னியில் வைத்து ராசாங்கத்தில் அமர்ந்தது ஆன வைதிக சைவநெறிக்கும் அது அழகேயன்றிப் புறம்பல்ல. உம்மையிற் செய்த சிவராச யோகத்தின் பயனாகிய ஞானத்தின் சம்பந்தம் இம்மையிற் கிடைக்க ஞானசம்பந்தராய் அகிலம்புகழ விளங்கிய மறைஞான ஞான முனிவரின் செயலைச் சாதாரண மக்களின் செயலைப்போல மதித்துக் கருணைவழிவந்த சைவ மரபிற்குப் பொருத்தமில்லாததொன்றைக் கூறும் மடாதிபதி

யின் கூற்று நேர்மையுடையதன்று. திருஞானசம்பந்தருடைய கருத்திற்கும் தகுதிக்கும் சைவசமய அறிஞர்கள் கருத்திற்கும் தகுதிக்கும் பொருத்தமுடையதே சமணர்கள் கழுவேறிய நிகழ்ச்சி விழாக் கொண்டாடல் என அறிவிக்கிறோம்.

# படித்தோம்!

கும்பாபிஷேகமலர்:- சிதம்பரம் ஸ்ரீ சபாநாயகர் கோவிலில் 7-7-55 ம் தேதி நடைபெற்ற மகா சம்புரோட்சண கும்பாபிஷேக நினைவாக இம்மலர் வெளியிடப்பெற்றுள்ளது. கௌரவ ஆசிரியர்கள் எம் ரத்தினசபாபதிபிள்ளை, எஸ் இரத்தினசாமி செட்டியார். பதிப்பாசிரியர்:- எம் எஸ் பி சண்முகம் எம் ஏ கிடைக்குமிடம்:- திரு, எஸ் இரத்தினசாமி செட்டியார், ஸ்ரீ நடராஜவிலாஸ் ஜுவெல்லரி ஹால், சிதம்பரம். விலை ரூபாய் இரண்டு.

நல்ல வழுவழுப்பான தாளில் பல வர்ணங்களையுடைய ஏராளமான நிழற்படங்களுடனும், மடாதிபதிகளும் சைவப் பேரறிஞர்களும்எழுதிய அரியகட்டுரைகள் பலவற்றுடனும், நன்கொடையாளர் பட்டியல், வரவு செலவு கணக்கு அறிக்கை ஆதியவற்றுடனும் இம்மலர் வெளிவந்துள்ளது.

இதன் இறுதியிலுள்ள கும்பாபிடேகக்கமிட்டியார் வேண்டுகோளின்படி, சிவநேசச் செல்வர்கள் ஆயிரக்கால் மண்டபத் திருப்பணிக்குப் பொருளுதவி செய்து சிவபுண்ணியத்தை ஈட்டிக்கொள்ள வேண்டுவதோடு அடக்க விலைக்கும் குறைவாகக் குறிப்பிட்டிருக்கிற இரண்டு ரூபாய்க்கு இம்மலரை வாங்கிப் பயனடையவேண்டுவது அனைவரின் கடமையுமாகுமென்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறோம்.

## சோ முருகப்பா காலமானார்

சென்னை ஜூன் 21-

காரைக்குடி திரு சோ முருகப்பா சென்னையில் நேற்றிரவு 11மணிக்குக் காலமானார். இவருக்கு வயது 63. அமராவதி புதூரில் மகளிர் இல்லம் நிறுவி மாண்டிசோரி முறைக் கல்விப் பயிற்சி அளித்துவந்தார். இவர் இலக்கியத்தில் - குறிப்பாகக் கம்பர் காவியத்தில் மிகுந்த ஈடுபாடுடையவர்.

# குரு பூஜை

செல்வன் இராம. திருநாவுக்கரசு

தேவகோட்டைச் சேக்கிழார் திருநாளில் 10-6-56ல் பேசியது.

சிவநெறிச் செல்வர்களே! செல்விகளே! வணக்கம். சிவ பெருமானே முழுமுதற் கடவுள் வேதமும் சிவாகமமும் அவர் அருளிச்செய்த முதல் நூல்கள் அவற்றுள் வேதம் பொதுநூல் சிவாகமம் சிறப்பு நூல். திருநீறு, உருத்திராக்கங்களே சிவ சின்னங்கள் திருவைந் தெழுத்தே சிவமூலமந்திரம் சிவலிங்க வழிபாடே சிவ பெருமானுக்குச் செய்யப் பெறும் மிக மேலான வழிபாடு திருநீறு தரித்தலும் உருத்திராக்கம் பூணுதலும் திருவைந் தெழுத்தை ஓதுதலும் சிவலிங்கத்தை வழிபடுதலும் வேதத்தில் விதிக்கப்பட்டன.

என்றாலும், சிவாகமதத்தில் விதிப்படி சிவதீட்சை பெற்றுக் கொண்டு இவைகளை அனுஷ்டிக்க வேண்டும். அவ்வாறு அனுஷ்டித்தால்தான் முத்தி சித்திக்கும். இதனை உணர்ந்து ஒழுகும் நெறி 'சிவநெறி என்றும் சைவசமயம்' என்றும் சொல்லப்பெறும்.

அறுபத்து மூன்று நாயன்மார்களாலும் மாணிக்கவாசக சுவாமிகளாலும், சேக்கிழார் பெருமானாலும், சந்தான குரவர்களாலுமே தமிழ் நாடெங்கும் சைவசமயம் தழைத்தோங்கியது ஆதலால் சைவ சமயிகள் அனைவரும் அவ்வுண்மை நாயன்மார்களுக்கு விதிப்படி குருபூசைநடத்துதல் வேண்டும்.

அந்த அந்த நாயனாருக்கு அவரவர் முத்தி பெற்ற திருநட்சத்திரத்தில், திருக்கோயிலில் சிறப்பு வழிபாடு நிகழ்த்தித் திருமடத்திலாயினும், விடுதியிலாயினும் சமயம், விசேடம், நிர்வாணம் ஆசாரிய அபிடேகம் என்னும் தீட்சைகளைப் பெற்ற மாகேஸ்வரர்களை அழைத்து அவர்களைத் திருவமுது செய்வித்தல் வேண்டும்.

மாகேஸ்வரர்கள் திருவமுது கொள்ள வந்தவுடன் அவர்களது திருவடிகளை நன்னீரால் விளக்கி ஆசனத்திருத்தி, நறுமண மலர்கொண்டு அருச்சித்துத் தூபதீபங் கொடுத்து கீழே விழுந்து வணங்கி அவர்களது ஆசீர்வாதத்தைப் பெறுதல் வேண்டும். நிர்வாண தீட்சை பெற்றுக்கொண்டு சிவஞான நூல்களை ஓதிப் பதி பசு பாசம் என்னும் முப்பொருளுண்மையை அறிந்த ஒரு சைவருக்கு, வேதாந்த மகா வாக்கியத்தை அறிந்த ஒரு கோடிப் பேர்களும் சமம் ஆகார் என்பது சிவாகம நூல் துணிபு.

நாயன்மார்களது குருபூசை விழா நாட்டிலே மிகுதியாக நிகழ்ந்து எல்லாம் வல்ல இறைவனது பேரருள் மல்குதல் வேண்டும் என்று பிரார்த்தித்து இம்மட்டில் அமைகின்றேன்.

நலம் பெருகுக!

---

## நேயர்களுக்கு

எதிர்பாராத வகையில் அச்சுப் பொறியில் பழுது ஏற்பட்டதன் விளைவாக 35வது இதழ் 1. 2, 3, 4, 13, 14, 15, 16 ஆகிய எட்டுப் பக்கங்களுடனும், 36, 37ம் இதழ்கள் ஒன்றாகவும் வெளிவர வேண்டியதாயிற்று. அன்பர்கள் பொறுப்பார்களாக.

## புயல் நிவாரணக் கடன்

திருவாடானை, ஜுன், 21- திருவாடானை - தொண்டி வட்டாரத்தில் 12ம்தேதிவரை 1389 மனுதாரர்களுக்கு 4 இலட்சத்து 83 ஆயிரத்து 520 ரூபாய் புயல் வெள்ள நிவாரணக்கடன் வழங்கி யிருப்பதாகவும், 1430 மனுக்கள் தள்ளுபடி செய்யப்பட்டதாகவும் இதற்கென நியமிக்கப்பட்டுள்ளவிசேடதுணைத் தாசில்தார் திரு. டி. பி. தனராஜ் தெரிவித்தார்.

## கொழும்பு

புதுக் கதிர்வேலாயுத சுவாமி கோயில் வெள்ளிரத மகோற்சவம் 21-7-56 முதல் 24-7-56 வரை நடைபெறும். 21உ காலையில் பெருமான் வெள்ளி ரதத்தில் ஆரோகணித்து வெள்ளவத்தையை அடைந்து அடியார்கள் செய்யும் வழிபாட்டை ஏற்றருளுவார். 22, 23உகளில் அங்கே தங்கியிருந்து 24உ மாலையில் கொழும்பு நகருக்கு வந்து சேருவார்.

---

# உங்களுக்குத் தெரியுமா?

பதினெட்டு ராஜ்யங்களைச் சேர்ந்த சுமார் 400 கிராம சேவிகைகள் குடும்ப நிர்வாகப்பயிற்சி நிலையங்களில் தற்போது பயிற்சி பெற்றுவருகின்றனர்

அஸ்ஸாம் எண்ணெய்க் கம்பெனியால் வேலை நடத்தி வரப்படுகிற அஸ்ஸாம் எண்ணெய் ஊற்றுப் பகுதிகளில் சுமார் 180 லட்சம் டன் எண்ணெய் இருக்கும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது,

இந்தியாவில் இரும்புக் கனி உற்பத்தி 1956 பிப்ரவரி மாதத்தில் 3,77,591 டன்னுக இருந்தது, 1956 மார்ச் மாதத்தில் 3,99,651 டன்னுக அதிகரித்தது.

பெரம்பூர் ரயில் பெட்டித் தொழிற்சாலை, 1956 அக்டோபருடன் முடிவடைகிற அதன் முதலாவது உற்பத்தி வருஷத்தில், அந்த வருஷத்துக்கு நிர்ணயிக்கப்பட்டிருந்த பிரயாணிப் பெட்டி உற்பத்தி லட்சிய அளவைப்போல் இருமடங்கு உற்பத்தி செய்யும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இந்தியாவில் தபால் ஆபீஸ் சேவிங்ஸ் பாங்கிக் கணக்குகளில் 1955ல் மொத்தம் 256.5 கோடி ரூபாய் இருந்தது; 1951-ம் இத்தொகை 185.1 போடி ரூபாயாக இருந்தது.

சென்ற வருஷம் இந்தியாவிலிருந்து சுமார் 1,26,34.326 ரூபாய் பெறுமானமுள்ள மோட்டார் எண்ணெய் (மோட்டார் ஸ்பிரிட்) ஏற்றுமதியாயிற்று. சுமார் 23,39,898 ரூபாய் மதிப்புள்ள உச்ச அளவு மோட்டார் எண்ணெய் ஆஸ்திரேலியாவுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டது.

குறைந்த வருமானப் பிரிவிருக்கான வீட்டு வசதித்திட்டங்களை நிறைவேற்றுவதற்காக, இந்திய சர்க்கார் பல்வேறு ராஜ்ய சர்க்கார்களுக்குக் கடன்களாக, 1956 மார்ச்சு மாதம் வரை மொத்தம் 21,53 கோடி ரூபாய் வழங்கியுள்ளனர்,

1954 - 55 - ம் ஆண்டில், மொத்தம் சுமார் 14.5 லட்ச ரூபாய் பெறுமானமுள்ள பிளாஸ்டிக் சாமான்கள் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்டன.

இந்தியாவில் மொத்த வர்த்தகம் 1954ம் ஆண்டில் 1,179 கோடி ரூபாயாக இருந்தது, 1955ம் ஆண்டில் 1.248 கோடி ரூபாய்க்கு உயர்ந்துவிட்டது.

முதலாவது ஐந்தாண்டுத் திட்டகாலத்தில் நர்சரி பள்ளிக்கூடங்களுக்காக ராஜ்ய சர்க்கார்களுக்கும், இஷ்டபூர்வ சேவா ஸ்தாபனங்களுக்கும் மொத்தம் 6,51,892 ரூபாய் வழங்கப்பட்டது.

இந்தியாவில் தபாலாபீஸ் சேவிங்ஸ் பாங்கிக்கணக்குகளின் மொத்த எண்ணிக்கை 1951-ம் ஆண்டில் 40,90,020 ஆகஇருந்தது 1955ல் 53,84,147 ஆகப் பெருகிவிட்டது

## சேக்கிழார் பெருமான்

14-6-56ந் தேதி இதழின் 4ம் பக்கத் தொடர்ச்சி

முன்பு நம்பியாண்டார் நம்பிகளால் வகுக்கப்பெற்ற பதினொரு திருமுறைகளுடனே திருத்தொண்டர் புராணத்தைப் பன்னிரண்டாம் திருமுறையாகக் கூட்டி, அதனைச் செப்பேடு செய்வித்துக் கனகசபையில் வைத்துச் சோழமன்னன் பூசிக்கச்செய்தான். சேக்கிழார் பெருமானது திருவருட்பெருக்கத்தை உணர்ந்த அவன் மீண்டும் அவரைத் தனது அமைச்சராக வைத்துக்கொள்ள அஞ்சி அவரது தம்பியாராகிய பாலறுவாயரை அழைத்து அவருக்கு அந்தப் பதவியைக்கொடுத்தான். அருண்மொழித்தேவர் சிதம்பரத்திலேயே சிலகாலம் எழுந்தருளியிருந்து ஒரு வைகாசி மாதத்துப் பூசநட்சத்திரத்தில் அகண்ட பரிபூரண சச்சிதானந்த சொரூபியாகிய ஆனந்தக்கூத்தரது குஞ்சிதபாத நிழலை அடைந்தார். அப்பெருந்தகையாரது, நல்விழாவில்பங்குகொண்டிருக்கின்ற உங்கள் அனைவருக்கும் என் உளங்கனிந்த வணக்கங் கூறிஇம்மட்டில்அமைகின்றேன்.

நலம் பெருகுக

## மின்சார உற்பத்தி

இந்தியாவில் 1955ம்ஆண்டில் மொத்தம்சுமார் 3கோடி ரூபாய் மதிப்புள்ள மின்சார மீட்டர்கள் உற்பத்தி செய்யப்பட்டன.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-38
துன்முகி-ஆனி-22
5-7-56
வியாழன் வெளியீடு
தேவகோட்டை
ஆண்டுச்சந்தா ரூ 4
வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## நெய்தல்

*தலைவியின் இற்செறிப்பைத் தலைவனுக்கு அறிவுறுத்தித் தோழி வரைவு கடாயது,*

புள்ளுப்பதி சேரினும் புணர்ந்தோர்க் காணினும், பள்ளி யானையின் வெய்ய வுயிரினை, கழிபட வருந்திய வெவ்வமோடு பெரிதழிந், தெனவ கேளாய் நினையினை நீநனி, யுள்ளினும் பனிக்கு மொள்ளிழைக் குறுமகள், பேரிசை யுருமோடு மாரி முற்றிய, பல்குடைக் கள்ளின் வண் மகிழ்ப் பாரி, பலவுறு குன்றம் போலப், பெருங்கவி னெய்திய வருங் காப் பினளே **253** :-கபிலர்

*ஒள்ளிய இழையை யணிந்த இளநங்கையாகிய தலைவி, பெருமுழக்கத்தையுடைய இடியோடு மழைபெய்கின்றதும், பலவாகிய பனம்பட்டைகளிலிட்டுண்ணுங்கள்ளினாலாகிய பேருணவையுடையதுமானபாரியினதுபலாமரமிக்கபறம்புமலையைப்போலப் பேரழகு அமைந்திருத்தலால் இற்செறிக்கப்பெற்று அரிய காவலுட்பட்டாள். ஆதலால் இக்களவொழுக்கத்தை நினைந்தாலும் நடுங்குகின்றாள்- நீ புள்ளினங்கள் தத்தம் கூடுகளின் கண்ணே சென்று இன்புற்றாலும். தலைவனும் தலைவியுமாகக் கூடிப் புணர்ந்தவர்களைக் கண்டாலும் படுக்கையிற் கிடந்த யானையைப்போல வெய்ய பெருமூச்சை உடையையாய் அதிகப்பட வருந்திய துன்பத்தோடு பெரிதும் அழிந்து, யான் கூறுவனவற்றையும் கேளாது எதையெல்லாமோ நினைப்பாயாயினை!*

பாலகவி

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

இன்னரிச் சிலம்புந் தேனு மெழில்வளை நிரையு மார்ப்பப்
பொன்னவிர் தாரோ டாரம் புணர்முலை பொருது பொங்க
மன்னனு மடந்தை தானு மதனகோ பத்தின் மாறாய்த்
தொன்னலந் தொலைய வுண்டார் துயில்கொண்ட விழிக ளன்றே

:-யசோதர காவியம் 93

உரை:-'இன் அரிச் சிலம்பும்-இனிய ஒலியைஎழுப்புகின்றகாற் சிலம்புகளும், தேனும்-கூந்தலிலே சூடியிருக்கின்ற மலர்களிலேயுள்ள தேன் வண்டுகளும், எழில்வளை நிரையும்-அழகுமிக்கவளையல் தொகுதியும், ஆர்ப்ப, ஓசையைச் செய்ய, பொன் அவிர் தாரோடு-யசோதரன் அணிந்திருந்த பொன்னாலாகிய மாலையும், ஆரம்-அமுதமதி அணிந்திருந்த முத்துமாலையும், புணர்முலை பொருது பொங்க-புணர்ச்சி நிகழும்பொழுது முலைகளால் தாக்குண்டு மேலெழ, மன்னனும் - யசோதரனும், மடந்தை தானும - அமுதமதியும், மதனகோபத்தின்-மன்மதன் எய்யப் பாய்ந்த மலர் வாளிகளினால், தொல் நலம் தொலைய - புணருதற்கு முன்பிருந்த மேனியழகு கெட, மாறாய்-மாறுபட்டு, உண்டார்-காம இன்பத்தைத் துய்த்து மகிழ்ந்தார்கள், விழிகள்-அவர்களது கண்கள், துயில் கொண்ட-உறக்கத்தை மேற்கொண்டன' என்பதாகும்.

செந்தமிழ் மொழியிலுள்ள காப்பியநூல்கள் பல. அவற்றுள் பெருங் காப்பியங்களென்றும், சிறு காப்பியங்களென்றும் ஐந்தைந்து நூல்கள்பேசப்பெறுகின்றன. சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்னும் ஐந்தும் பெருங்காப்பியங்களாம். யசோதரகாவியம், சூளாமணி, உதயண குமார காவியம், நாக குமார காவியம், நீலகேசி என்

னும் ஐந்தையும் சிறுகாப்பியங்களென்பர்.

மேலே கூறப்பெற்ற பத்துக் காப்பியங்களும் சைன, சமண, பௌத்த மதச் சார்புடையனவாய் இருக்கின்றன. என்றாலும் மற்ற மதங்களின் பாற் காழ்ப்புக் காட்டாது அவற்றையும் உரிய இடங்களில் அவை போற்றிச் செல்லுவது, அவ்வவ் வாசிரியர்களின் பெருந்தன்மையை நாமறிந்து கொள்ளத் துணை செய்வதாகும்.

பெருங்காப்பியங்களுள் வளையாபதி - குண்டலகேசியும் சிறுகாப்பியங்களுள் நாககுமாரகாவியமும் மறைந்து விட்டன. என்றாலும், மற்ற நூல்களைக் கொண்டு அறியப் பெறுகின்ற குறிப்புகளையும், ஆராய்ச்சி அறிவையும் வைத்துச் சில அறிஞர்கள், அக்காப்பியக் கதைகளை ஒருவாறாக வெளியிட்டிருக்கிறார்கள்.

பெருங்காப்பியங்களுள் சிந்தாமணி - சிலப்பதிகாரத்திலுள்ள நயங்கள் மணிமேகலையிற்காணப் பெறாதவாறு போலச் சிறுகாப்பியங்களுள்ளும் சூளாமணி—நீலகேசியிலுள்ள நயங்கள் யசோதர காவியம் - உதயண குமார காவியங்களிற் காணப் பெறவில்லை. இக் காப்பியங்களனைத்தும் வடமொழி முதலிய பிறமொழி நூல்களையே முதல் நூல்களாகக்கொண்டனஎன்பது நினைவிலிருத்தத் தக்கதாகும்.

‘யசோதர காவியம்’ அவந்தி நாட்டிலுள்ள உஞ்சயினி நகரத்திலிருந்த யசோதரனென்னும் சமணமன்னனது வரலாறு கூறுவது. வடநூலை முதனூலாகக் கொண்டது. இதனை இயற்றிய ஆசிரியர் இன்னாரென்று தெரியவில்லை. இனிய எளிய 330 செய்யுட்களானியன்ற இந்நூல் ஐந்து சருக்கங்களாக அமைந்துள்ளது.

ஒருவனது வினைப்பயன் அவனை ஒருசிறிதும் விடாது வந்துபற்றி இன்பதுன்பங்களைக் கொடுத்தே தீருமென்ற சமண் சமயக் கொள்கை, இந்நூலிலும் சிலப்பதிகாரமுதலிய மற்ற நூல்களிலும் வலியுறுத்திப் பேசப் பெற்றுள்ளது. ‘பசுமந்தையில் அவிழ்த்துவிடப்பெற்ற இளங் கன்று அதன் தாயை அறிந்து சேருவது போன்றது. வினை அது செய்தவனை நாடிச் சேருவது’ என்பார் நாலடியார் ஆசிரியர். ‘ஊழ்வினை யுருத்துவந்து ஊட்டும்’ என்பார் இளங்கோவடிகள்.

‘வினைப்பயன் செய்தவனைச் சென்று சேரும்’ என்பது உண்

மையே ஆயினும், 'சடமாகிய வினை, தானே வந்து சேர்ந்து பயன்தராது. அதனைச் சேர்ப்பவன் சித்துப் பொருளாகிய ஆண்டவனே' என்பது சைவ சித்தாந்திகள் கண்டறிந்து கூறிய உண்மையாகும். உயிர்கள் தத்தம் வினைகளுக்கேற்பவே இன்பதுன்பங்களை நுகர்ந்து கொண்டிருக்கின்றன என்பதை அறியாமையினாலேயே, உலகம் பலவகைத்தீங்குகளைச் செய்து கொண்டிருக்கின்றது. வினையின் உண்மையும், அதன் இயல்பும் விளங்குமானல் மக்கள் சமுதாயம் நல்வாழ்வடையும் என்ற பேருண்மையை உணர்ந்தே, இந்நூலாசிரியர் பல இடங்களில் அதுபற்றி விளங்க எடுத்துரைத்துக்கொண்டு செல்கிறார்.

சமண முனிவர்கள் செய்த வடமொழிப் புராணங்கள் பலவற்றுள் பத்மபுராணம் அரிவம்சபுராணம், மகாபுராணம், உத்தரபுராணம் என்பன சிறந்தனவாம். இவற்றுள் உத்தரபுராணத்தை எழுதியவர் குணபத்திரரென்பவர். இப்புராணத்தில் தான் முதன்முதலாக யசோதர மன்னனது வரலாறு பேசப்பெற்றுள்ளது. இதன் பின்னர்ப் பல ஆசிரியர்களால் இவ்வரலாறு, சிற்சில வேறுபாடுகளுடன் எழுதப்பெற்றுள்ளதென்று அறிகிறோம்.

யசோதர காவியமென்னும் தமிழ்நூலை இயற்றியவர், வெண்ணாவலூருடையார் வேள் என்று ஒருசிலர் கூறுகின்றனர். இதற்குப் போதிய உறுதியான சான்றுகளிருப்பதாகத் தெரியவில்லை. 'மருவு வெவ்வினை வாயின் மறுத்துடன், பொருவில் புண்ணியம் போகம்புணர்ப்பதும், வெருவு செய்யும் வினைப்பயன் இன்றெனத், தெரிவுறுப்பதும் செப்புதலுற்றதே' என்று நாற்பொருள் கூறி நூலைத் தொடங்குகிற ஆசிரியரது போக்கினால், அவரது பெயரறியப் பெறாது போயினும் உயர்வு அறியப்பெறுகின்றதென்பது ஒருதலையேயாம்.

நீர்வாழ் பிராணிகள் நீரின் ஆழத்தையறியாது - அறியவும் முயலாது பொழுது கழிப்பது போல நிலம்வாழ் பிராணிகளுட் சிறந்த மனிதனும் நிலமுதலியவற்றின் உண்மை - இயல்புகளை அறியாது அழிந்து போகின்ற அவற்றிலேயே பற்று வைத்து ஒட்டியிருந்து அவலமடைகின்றான். நிலையாத வாழ்க்கைநிலைத்த வாழ்க்கையைப்பற்றி நினைவூட்

டாதபொழுது அதனுல் எதுவும் பயனில்லை.

யசோதரனது பெற்ருேர் அசோகன்-சந்திரமதி என்பவர். அவந்தி நாட்டு உஞ்சயினி மன்னனுகிய அசோகனுக்குத் தலையில் உண்டான நரை, அரச வாழ்வைத்துறந்து தவவாழ்வை மேற்கொள்ளும்படி செய்தது. தந்தை தவ முயலவே மைந்தனுகிய யசோதரன், அரசுரிமையை மேற்கொண்டான். யசோதரனுக்கு வாய்த்த மனைவி அமுதமதி யென்னும் பெயருடையவள் உருவழகால் ஒருவரையும் இணை சொல்லமுடியாதபடி சிறந்திருந்த அவளது கூட்டுறவு, யசோதரனை அறத்தை நெகிழ்த்து விட்டுப் பொருளின் பங்களில் இறுகத்தோய்ந்திருக்குமாறு செய்துவிட்டது.

உள்ளத்தையும் உணர்வையும் அமுதமதிக்குப் பறிகொடுத்த யசோதரன் யசோமதி என்னும் புதல்வனொருவனைப் பெற்றபின்பும் கூட யாமமும் பகலும் ஓர் சறு இல்லாதன என்று சொல்லத்தக்க நிலையில் அவள்பால் இன்பம் நுகர்ந்து வந்தான். அவள்பால் அவன் எவ்வளவு அன்புவைத்திருந்தானே: அவ்வளவு அன்பை அரண்மனை யானைப் பாகனுயிருந்த அட்டபங்கனென்பவனிடம் அவள் வைத்திருந்தாள். அதனுல் அமுதமதி, ஒருநாளிரவு கணவனேடு பள்ளியிற கண்ணுறங்கும்பொழுது அவனை விடுத்து மாளவப் பஞ்சமப் பண் பாடிய அட்டபங்கனை யடைந்து காமந்துய்த்து மீண்டாள். அவளது காவொழுக்கம் யசோதரனைத்துறவுபூணுமாறு செய்தது.

இந்த நிகழ்ச்சியைக் கூறுகின்ற இந்நூலின் இரண்டாவது சருக்கத்தில் யசோதரனும் அமுதமதியும் நுகர்ந்த இன்பத்தை நான்கு பாடல்களில் வைத்துக் கூறிய ஆசிரியர், புணர்ச்சி அவசத்தால் அவர்களிருவரும் கண்ணுறங்கலை இப்பாடலில்வைத்து உணர்த்துகின்ருர், சிற்றின்பப் புணர்ச்சியின் பின்னே வருகின்ற உணர்ச்சியற்ற அவசநிலை, பேரின்பப் புணர்ச்சியின் பின்னே வருகின்ற தன்னைமறந்து தானற்று நிற்கும் நிலையை நினைவூட்டுவதாகும்.

'புணர்ச்சிக்காலத்தில் அமுதமதியினது காற்சிலம்பும், கூந்தல் வண்டும், கைவளையும் ஒலித்

(12ம் பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

சமயங்களெல்லாஞ் சோபானங்கள். அவை பற்றிய அம்மூன்றுலுந்தான் ஆன்மாக்கள் படிப்படியாகப் பக்குவமடைய முடியும். சைவமொன்றே சித்தாந்தம். அதுபற்றிய அம்மூன்றுமே ஆன்மாக்களை அவற்றது வாழ்க்கையின் குறிக்கோளிற் கொண்டுபோய்ச் சேர்க்கும். சமயம் பற்றிய அம்மூன்றும் உளவென்பதை நவீனரும் 'சைவப் பண்பாடு, சமணப் பண்பாடு போன்று இசுலாமியப் பண்பாடு என்று பிரிக்கலாமே தவிர தமிழ்ப்பண்பாடு இசுலாமியப் பண்பாடு என்று பிரிக்கக் கூடாது' (7-2-56 தமிழ்நாடு) என்று கூறிச் சம்மதிக்கிறார். கிறிஸ்தவ கலாசாரம், இசுலாமிய கலாசாரம் முதலிய வழக்குகளையுங் காண்க. அவை சமயம் பற்றி அங்ஙனம் வேறுவேறாய்ப் பிரிந்துபோன பிறகு தமிழுக்கென எப்படி யிருக்க முடியும்? பாரதியார் வைணவப் பண்பாடும் கலையும் ஆசாரமும் உடையாராயின் ஆழ்வார்களின் வரிசையில் வைத்தற்குத் தகுதியானவர்தான்; சைவப் பண்பாடும் கலையும் ஆசாரமும் உடையாராயின் நாயன்மாரின் வரிசையில் வைத்தற்குத் தகுதியானவரே. ஆனால் அவ்விரு சமயத்து மூன்றுமே யுடையாரவரென்றால் அவர் அவ்விரு வரிசையிலும் வைத்தற்குத் தகுதியாகாதவரென்பதையுங் காண்க. அவர் கவிதைகளில் தமிழ்க் கலாசாரமும் பண்பாடும் மிளிர்கின்ற காரணத்தால் அவரை அவ்விரு வரிசைகளிலும் வைக்க வேண்டுமென நவீனர் செய்யுஞ் சிபார்சு ஒரு சாராரின் அபிமானத்தைப் பெறுவதற்கேயாகும். தமிழ் பற்றிய அம்மூன்றால் ஆன்மாக்களுக்கு எவ்விதலாபமும் வராது.

'பேரரசர்களாக விளங்கிய சோழவேந்தர்கள் இக் கலப்புத் தமிழை வளர்த்தனரே யன்றித் தூய தமிழை வளர்க்கவில்லை' (14-8-55 தமிழ்நாடு) 'அரசர்கள் போலிச் சைவத்தை வளர்த்தார்கள்' (11-8-55 தமிழ்நாடு) என்கிறார் நவீனர். அத் தூய தமிழாவது பிறமொழிச் சொற்

கள் வந்து கலவாத தனித்தமிழ். அது கலவையாற் கெட்டதெனக் கூறி அவர் இரங்குகிறார். அக்கலவைபற்றிய விசாரணை முன்னரே முடிந்தது. அவ்வேந்தர் வளர்த்தது தொல்காப்பிய வரம்புபட்ட தமிழே. அரசர் போலிச் சைவத்தை வளர்த்தனரென்பது அந் நவீனரின் ஒப்பாரியிலுள்ள மற்றொரு கண்ணி. இருக்காதி வேதங்கள், காமிகாதி சிவாகமங்கள், திருமுறைகள் சித்தாந்த சாத்திரங்கள், சிவஞானபோத திராவிட மாபாடியம் என்பவற்றை வரம்பாகக் கொண்டது சைவம். அச்சமயத்தைப் பிரகாசிப்பித்தவர் சம்பந்தாதி ஆசிரியன்மார்- அக்காலையரசர் அதையே தம் அரசாங்க சமயமாகக்கொண்டு அதன் சொரூபங் கெடாமற் போற்றி வந்தனர். அதை விரும்பாத அரசரோ கூன் பாண்டியரேபோல வேற்றுச் சமயங்களிற் புகுவரே யன்றி உள்ளிருந்துகொண்டே குட்டிச்சுவராக்கார். புகழ் பொருள்முதலிய வற்றுக் காசைப்பட்டுத் தலைகால் தெரியாமற் போலிப் பிரசங்கங்கள் செய்பவர் நவீனரே. அவர் தம் குற்றத்தை அவ்வரசர்மேற் சுமத்துவது அக்கிரமம். அதனால் அவர் பிரசாரம் உண்மைச் சைவமாய்விடாது. ஆமாயின் அதற்குத் தொன்று தொட்டு வரம்பாயிருந்து வரும் பிரமாண நூல் எது? அதை யாசரித்து முத்திபெற்றவர்யார்? அம்முத்திக் கிலக்கணம் யாது? அன்ன வினாக்கள் பல எழும். அப்போது அவர் விடைதரமாட்டாமல் விழிப்பர். எந்தச் சமயமும் அதன் பிரமாண சாத்திர வரம்புக்குள் வைத்தே போற்றப்படவேண்டும். அங்ஙனம் போற்றப்பட்டாலே அஃதுண்மைச் சமயமாகும். அவ்வரசரும் அம்முறையிற்றான் சைவத்தைப் பாலித்தனர். வரம்பழிந்ததே போலிச் சமயம். அச்சமயப் பிரவர்த்தகர் நவீனர்தான். அவர் 'ஒருமொழி சிதைக்கப்படுமானல் நாடே சிதைக்கப்படும்' (5-8-55 தமிழ்நாடு) என்கிறார், மொழியைச்சிதைப்பதாவது அம்மொழியைத் திறம்படக் கல்லாமையும், அதில் ஆன்மலாபத்தைத் தடைசெய்யும் நூல்கள் மிகுவதுமே யாம். 'மதம் என்று சாகிறதோ, அன்று சமுதாயத்தைக் குழிதோண்டிப் புதைஎன்கிறான் இத்தாலிய நாட்டுச் சாணக்கியன்' (21-7-55 தமிழ்நாடு) என அவர் சொல்வதுங் காண்க.

(தொடரும்)

உ
சிவமயம்
பாலகுருவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

செட்டிநாடு

துன்முகி ஆனி - 22

# மணிவாசகர் திருநாள்

பெருந்துறை புகுந்து பேரின்ப வெள்ளத்து மூழ்கிய புனிதராகிய மணி வாசகப் பெருந்தகையாரது திருநாள் **11-7-56** புதன் கிழமை யாகும். உயிர்களின் பக்குவ நிலையை அறிந்து, இறைவன் தேடிவந்து ஆட்கொள்ளுகின்ற பேருண்மையை உணர்த்தும் நம் நாட்டு வரலாறுகளுள் மணிவாசகப் பெருமான் வரலாறு முன்னணியிலிருப்பதாகும்.

ஆண்டவன் ஆன்மாக்களை ஆட்கொள்ளுகின்ற முறையை இரண்டு வகையான நியாயங்களில் வைத்துப் பெரியோர்கள் உணர்த்துவார்கள். அவை மர்க்கட நியாயமென்றும் மார்ச்சால நியாயமென்றும் சொல்லப்பெறும்- மர்க்கடமென்பது குரங்கு. மார்ச்சாலமென்பது பூனை.

குரங்கும் பூனையும் அவையவற்றின் குட்டிகளைப் பேணி உடனணைக்கும் முறை ஒன்றினொன்று மாறுபட்டதாகும். தாயின் முயற்சி எதுவுமின்றிக் குட்டியணையை அணைத்துக்கொள்வது குரங்கு. குட்டியின் முயற்சி எதுவுமின்றித் தாயே முயன்று அணைத்துக் கொள்வது பூனை.

தானே முயன்று தாயின் வயிற்றை இறுகப் பிடித்துக் கொண்ட குட்டி, அன்றுபிறந்ததேயாயினும் அதனைப் பாதுகாப்பதில்

தாய்க்குரங்கு அக்கறைகொள்வதே யில்லை. முயன்று முயன்று முதுகில் கௌவி வைத்துக்கொண்டு செல்லும் தாய்ப்பூனை, பிறந்து வளர்ந்த குட்டியேயாயினும், அது அடிக்கடி கீழே விழுந்து கொண்டேயிருக்க மீண்டும் மீண்டும் கௌவிக் கௌவித் தூக்கிச்சென்று குறித்த இடத்தை அடையும்.

இதுபோலவே ஆன்மாக்கள் முயற்சியால் அவை ஆண்டவனை அடைதலும், ஆண்டவன் முயற்சியால் அவனை ஆன்மாக்கள் அடைதலுமெனத் திருவருள் பெறுமுறை இரண்டாய் அமைந்துள்ளது. சத்திரிபாதம் கைவரப்பெற்ற உயிர்களை இறைவன் தேடி வந்து ஆட்கொள்ளுவான்.

உலகியலில் ஒட்டி வாழ்பவர் போல வாழுகின்ற அவர்கள் புளியம்பழம் போலப் பதார்த்தங்கள் பாராது பரமே பார்த்திருக்கின்ற பண்பாடுடையவர்களாக விளங்குவார்கள். பாண்டியனுக்கு முதலமைச்சராகப் பணியாற்றிய அடிகள் அரசுரிமை அலுவல்களில் எதும் குறைபாடுடையவராக வாழ்ந்தாரில்லை. 'சண்ணையும் கவசத்தையும்போல அவரது அமைச்சியல் குடிமக்களுக்கு உதவியது என்று வரலாற்றாசிரியர் கூறுவது கொண்டு இவ்வுண்மையை அறிந்துகொள்ளலாம்.

புறத்தே செய்ய வேண்டுவனவற்றில் சிறிதும் வழுவின்றிஅவர் ஒழுகிய மையாலேயே, அளவு கடந்த பொன்னை அவரிடம் கொடுத்துக் குதிரை வாங்கிக் கொண்டு வரும்படி அரசர் அவரை அனுப்பினார். உடம்பைப் பாண்டியன் பணிக்கும் உள்ளத்தை ஆண்டவன் பணிக்கும் உரிமையாக்கி நின்ற உயர்வு அவரிடத்திலேஇருந்தது.

அதனாலேயே உண்மையுணர்த்தி மெஞ்ஞானத்தை நல்குகின்ற குருமூர்த்தி எப்பொழுது கிடைப்பாரென்ற ஏக்கம்அவருக்கு இடையறாது இருந்து வந்தது. இறைவனிடத்து வைத்த மாறாத பேரன்பே, அவ்விறைவனை அவர் செல்லும் வழிப் பாதையில் வந்து இருக்கும்படி செய்துவிட்டது. உய்திபெறவேண்டுமென்றுங் கருத்துடைய நம்மனோர்க்கு இது ஒரு நல்ல படிப்பினையாகும் இதனைப் படிப்பிக்கின்ற ஆசிரியராகிய மணிவாசகரை வழிபட்டு அவரைப் பின்பற்றி இன்புறுவோமாக.

---

# ஆண்டிற் பெரியார்-அறிவிற் சிறியார்

ஈ. இராசேந்திரன் (மயிலம் கல்லூரி மாணவன்)

தனக்கென நிலையாக எந்தக் கொள்கையுமில்லாத ஈரோட்டு ஈ. வே. ரா. வை மற்றவர்கள் எதற்காகப் பெரியாரென்று அழைக்கின்றார்களோ? தெரியவில்லை. எம்போன்றார் அவரது நரைத்து மூத்துப்பழுத்த முதிர்வு ஒன்றினால்மட்டுந்தான் பெரியார் என்ற பெயர் அவருக்குப் பொருந்துமென்று நினைக்கிறோம்.

எங்கள் வீடுகளில் அறிவு நிரம்பாத பிள்ளைகள்விளையாடுகிற விளையாட்டுச்செயல்களும்அப் பிள்ளைகளின் அறிவுக்குக்கூடப் பொருந்தாதன என்று தோன்றுபவைகளுந்தான் ஈ வெ ரா வுக்கு இணையற்ற பயனைத்தரக் கூடிய செயல்களாகப் புலப்படுகின்றன.

பிள்ளையார் உடைப்பு என்ற ஒரு வேடிக்கைநிகழ்த்தி, அதிற் சிறிதளவும் வெற்றி காணாது தோல்விக்கஞ்சாத அவரது பெருந்தகைமையோடு' அவர்உலவிக்கொண்டிருக்கிறார். அவரது பிள்ளையார் உடைப்பு இயக்கம் தமிழ்நாட்டில் பிள்ளையார் வழிபாட்டை வேரூன்றும்படி செய்துவிட்டது. அஞ்சாமை மிக்கவர்களென்று கண்டு சிவனடியார்களைவிட்டுவிட்டு வைணவர்களிடம் முட்டிப் பார்க்க எண்ணி 'ராமர் உடைப்புச்' செய்யப்போவதாக ஓர் தினத்தாளில் அறிக்கை வெளியிட்டார். அந்த அறிக்கையைப் படித்துப்பார்த்து அவரது சீடர்களான காக்காய்க்குஞ்சுகள் கறைந்து திரிந்தனவேயன்றி வைணவர்கள் ஒரு சிறிதும் அஞ்சவில்லை.

இப்போது சைவரும் வைணவரும் மதித்து வணங்கும் முருகன் மீது தமது கோணல் புத்தியைச் செலுத்தி 24-6-56தினத்தந்தியில் ஒரு அறியாமை புலப்படும் அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்.

ஒழிப்பதற்கும் அழிப்பதற்குமே ஓயாது உழைத்து வரும் இவர் இதுவரை தமிழ்நாட்டா

ருக்குச் சாதித்து உதவியது ஒன்ருவதுண்டா? தஞ்சாவூர் மண் பொம்மைகளில் கடவுள் உருவம் முதல் கடைக்கோமுட்டிச் செட்டியார் உருவம்வரை எத்தனையோ உருவங்களிருக்கின்றன. கடைக்குப் போகும்போதெல்லாம் நம் வீட்டுப்பிள்ளைகளுக்கு அவைகள் வாங்கிக் கொடுக்கப் பெறுகின்றன. அந்தப் பொம்மைகளை அவைகள் கீழேபோட்டு உடைப்பதுபற்றி இதுவரை யாரும் கவலைப்படவில்லை என்பதை எண்பதுவயது நிறைந்தபிறகும் எட்டு மாதக் குழந்தையின் அறிவே பெற்றிருக்கிறபடியால் ஈ வெ ரா அறியமாட்டார்தான்.

கருப்புச்சட்டைக்காரர்களின் அடாதசெயலுக்கு நாங்கள் எந்த வகையிலும் அஞ்சமாட்டோம் என்பதை ஆயிரத்து முன்னூறு ஆண்டுகளுக்கு முன்பு நடந்த வரலாறு அறிவித்துக் கொண்டிருக்கிறது. ஞானசம்பந்தர் காலத்தில்பாண்டிநாட்டில் குழப்பம் விளைவித்துக் கொண்டிருந்த சமணர்கள் கருப்புச்சட்டைக் காரர்களே (உள்ளத்தால் மட்டுமல்ல உருவத்தாலும்) என்பதை ஈ வே ரா அறியமாட்டார். அகத்தும் புறத்தும் கருப்பு வைத்துக் கொண்டு செய்கின்ற தீச்செயல் அகத்திலே செம்மையையும் புறத்திலே வெண்மையையும் வைத்துக்கொண்டிருக்கும் எங்கள் திசைநோக்கவும் அஞ்சும் என்பதை அவரறிய இன்னும் அதிககாளில்லை.

---

## நோட்டீஸ்.

சப் கோர்ட்டு தேவகோட்டை

S. C No 21 of 56

RM. AR. AR. இராமசாமி செட்டியார் —வாதி

RM, N. N. நாகப்பசெட்டியார் (பள்ளத்தூர்) —பிரதிவாதி

வாதிக்குப் பிரதிவாதி எழுதிக்கொடுத்திருக்கும் புரோநோட்டுப்படி ரூ 543-3-8ஐ வரபெற்ற ஷிகம்பரில் பிருது செய்து 20-7-56ல் வாயிதா ஏற்பட்டிருக்கிறதை இதன் மூலம் தெரிவித்திருக்கிறது.

R. Raghupathi Iyengar

தேவகோட்டை } Advocate
28-6-56

(5ம் பக்கத்தொடர்ச்சி)

தல' என்றுகூறி, அ வ ள து கீழும் மேலும் நடுவுமாகியஉறுப் புக்களின் அசைவை எ டு த் து ரைத்து. அதனல் உடலசைவை யும், அ வ் வ சை விற்கு அடிப் படையாகிய உள்ள உணர்ச்சியை யும் ஆசிரியர் தெரிய வைத்தார்

முன்னே, ய்சோதரனிருந்த பள்ளியறைக்கு அமுதமதி வந் தாளென்பதைக் கு றி ப் பிட்ட ஆசிரியர், 'தேன் வண்டும் கரு வண்டும் பாட்டிசைக்க அல்குலி டத்தே யணிந்த மேகலையொலி, சிலம் பொ லி யோ டு கலந் தொலிக்க இனிய அழகிய மண மிக்க பூ மா லை வந்ததுபோல வந்தாளென்றுகூறினர். அதனை நினைவுகூர்ந்தால் இப் பாடலில் 'வண்டினமார்ப்ப' இ ரு வ ரும் புணர்ந்தனரென்று உ ரை த் த தி லுள்ள சிறப்பு நன்கு விளங் கும்.

ஆடவர் மார்பிலணியும் மாலை யைத் தாரென்பது ப ண் டை வழக்கு, பொன்னவிர்தார் என்று யசோதரன் அ ணி ந் த மாலை யைக்கூறிய ஆ சி ரி ய ர், ஆரம் என்பதால் அமுதமதி அணிந்தி ரு ந் த முத்துமாலையைக் கூ றி னர். கழுத்திலணிகின்ற மா லை யைக் குறிக்கும் பொதுப் பெய ராக ஆரம் க ரு தப்பெறுகின்ற தெனினும், மு த் தாரத்தையே அது சிறப்பாகக் குறிப்பதாகும்.

இங்கே அமுதமதி மடந்தை எ ன் ற சொல்லால் உணர்த்தப் பெற்ருள், பதின்மூன்றிற்குமேல் பத்தொன்பதிற்கு உ ட் ப ட் ட ஆண்டினை யு டை ய வளே மங் சைப் ப ரு வ த் தினளென்பதும் அவளைக் கூடிநுகரும் இன்பமே நனிசிறந்ததென்பதும் இதனல் நினைவுகூ ர வேண்டியனவாகும்.

சிற்றின்பம் நுகர நுகர, நுகர் பவரை மேலும் மேலும் அந் நுகர்ச்சியிலிடுபடுத்தும் இயல்பு டையது. 'அறிதோ றறியாமை க ண் ட ற் ருல் காமம், செறி தோறும் சே யி ழை மாட்டு' என்ற திருக்குறளும் 'புணருந் தொறும் பெரும் போகம் பி ன் னும் புதிதாய், மணந்தாழ் பு ரி குழலாள் அல்குல்போல வ ள ர் கின்றதே' எ ன் னு ம் தி ரு க் கோவையும் இதனை அ றி வி க் கின்றன. அ வ ர் க ள் து யி ல் கொண்டார்களென்று சொ ல் லாது, விழிகள் துயில் கொண் டன என்று சொல்லியதால் சிற் றின்ப அநுபவத்தில் அ வ ர் க ளு க் கு த் தெவிட்டுதல் நிகழ வில்லை எ ன் ப து தெரிகின்றதல் லவா?

# அறிஞர் சொ. முருகப்பனர்

தனவணிக நாட்டுத் தமிழறி ஞர்களுள் ஒருவராகத் திகழ்ந்த திரு சொ முருகப்பனர் அவர்கள் சென்ற வாரத்தில் இவ்வுலக வாழ்வை நீத்தது, பெரிதும் வருந்துதற்குரியதாக ஆகிவிட் டது காரைக்குடியில் பிள்ளை யார்பட்டிக் கோயில் மரபில் 1893ல் பிறந்த இவர்கள், இள மையில் திண்ணைப் பள்ளியிற் கல்விபயின்ருர்கள். நகரமுறைப் படி திருமணமானபிறகு 1912ல் பாதரக்குடி மடாதிபதியிடம் சிவதீட்சை பெற்ருர்கள். 1913 முதல் 1916 வரை மலேயாவி லுள்ள ஈப்போவில் கொண்டு விற்ருர்கள்.

கவிஞர் சுப்பிரமணிய பாரதி யார் பாராட்டிப்பாடிய காரைக் குடி இந்துமதாபிமான சங்கம் தோன்றுவதற்கு முதற் காரண மாய் இருந்தவர்கள் இவர்களே யாவார்கள். தனவணிக சமூக முன்னேற்றங்கருதி இவர்களால் தனவைசிய ஊழியர் சங்கம் என ஒரு சங்கமும் தனவைசிய ஊழி யன் குமரன் ஆகியவார-மாத வெளியீடுகளும் தொடங்கப் பெற்றன.

சைவ வளர்ச்சியைக் குறிக் கோளாகக்கொண்டு காரைச் சிவ னடியார் திருக்கூட்டத்தைத் தொடங்கி அதன் வாயிலாகச்சம யப்பணி-சிறப்பாகச் சிவ காரு ணியப் பிரசாரம்செய்து இவர் கள் பெரும்பயனும் புகழும் பெற் ருர்கள்.

1938ல் அமராவதிபுதூரில்மக ளிர் இல்லம்கண்டு குழந்தைக ளின் கல்வி வளர்ச்சியில் கண் ணுங்கருத்துங்கொண்டு குழந் தைகளோடு பழகுவதில் இன் புற்று நின்றஇவர்கள் கம்பராமா யணத்தில் பெரிதும்ஈடுபட்டுப் பாலகாண்டப்பதிப்பைநல்லஉரை யுடன்வெளியிட்டார்கள் அயோ த்தியா காண்டம் அச்சுவேலை முடியும்நிலையிலிருக்கிறது. கிட் கிந்தாகாண்டம் உரை எழுதி முடிந்துள்ளது. மற்றைக்காண் டங்களின் மூலப்பாடல்கள் செப் பனிடப்பெற்றுள்ளன. இந்த நிலையில் இவர்கள் நம்மைவிட்டுப் பிரிந்தது நமக்கு ஈடுசெய்து கொள்ளமுடியாத நட்டமாகும். ஓயாத உழைப்பாளியின் பிரிவு மற்றவர்க்குத் துன்பந் தருவ தென்ருலும் அவருக்கு ஓய்வை வழங்குவதென்னும் உண்மை யைநினைந்துதான் நாம் ஆறுத லடைய வேண்டும் :-பாலகவி

---



திருஇடும்பாவனத் திருப்பதிகம்: தருமபுர ஆதீன வெளியீடு எண் 368. ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களின் 17-6-56 ஜன்ம நட்சத்திர நாளில் வெளியிடப் பெற்றது. வழக்கம்போல் ஆதீனத் தேவார பாடசாலை ஆசிரியர் திரு ஆர் வேலாயுத ஓதுவார் மூர்த்திகள் தலச்சிறப்பு முதலியன எழுதியுள்ளார்கள்,

## தேவகோட்டை

சன்மார்க்க சங்க 7வது ஆண்டுவிழா 30–6–56ல் நடைபெற்றது. மகேசுவர பூஜை அபிஷேக ஆராதனை, சமாராதனை சிறப்பாக நிகழ்ந்தன. 8வது ஆண்டுக்கு ஸ்ரீ சித வே ஷண்முகநாதபிள்ளை தலைவராகவும் ஸ்ரீ நை ஆறுமுகம்பிள்ளை உபதலைவராகவும் ஸ்ரீ எ ஜி ரெங்கஸாமிஅய்யங்கார் காரியதரிசியாகவும் ஸ்ரீ வை கோபாலகிருஷ்ணய்யர் உப-காரியதரிசியாகவும் ஸ்ரீ பெரி கு கிருஷ்ணக்கோன் பொக்கிஷதாராகவும் ஸ்ரீ சோம நாராயணன்செட்டியார் சங்கக் கணக்குப் பரிசோதகராகவும் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டனர்.

---

## நோட்டீஸ்.

சப் கோர்ட்டு புதுக்கோட்டை

S. C No 71 of 56

கு. தா. கிரனூர் இப்ராம்சா ராவுத்தர் மகன் கா. இ. அப்துல்ஹமீது —வாதி

கிரனூரிலிருந்து இப்பால் கும்பகோணத்திலிருக்கும் காதர் மொய்தீன் லெவை சாயபு மகன் குலாம் மொய்தீன் லெவை

—பிரதிவாதி

பிரதிவாதிக்குத் தெரிவிக்கிறது: வாதியால் உம்பேரில் கோட்டுப்படி ரூ 906-0-0க்கு தாவா தொடரப்பட்டு டயம் 14-7-56 ஏற்பட்டிருக்கிறது. உபாது கக்ஷியை அன்று பகல் 10-30மணிக்கு ஷை கோர்ட்டில் ஆஜராகித் தெரிவிக்கவும்

எல். கிருஷ்ணமூர்த்தி சர்மா

புதுக்கோட்டை 25-6-56 } வாதி அட்வகேட்

---

சென்னைப் பதிவுஎண் 2099

# செட்டிநாடு

இந்தியாவில் தீப்பெட்டித் தயாரிப்புத் தொழிலில் சுமார் 24,500 பேர் வேலை பார்த்து வருகின்றனர். அவர்களில் 16,000 பேர் குடிசைத் தொழில் அடிப்படையில் நடைபெற்று வரும் பிரிவிலும் பாக்கியுள்ளோர் யந்திர ரீதியில் நடைபெற்று வரும் பிரிவிலும் வேலை பார்த்து வருகின்றனர்.



மத்திய ராஜ்ய சர்க்கார்களின் நிர்வாகப் பிரிவுகளிலும் தொழில் ஸ்தாபனங்களிலும் வேலைபார்த்துவரும் ஊழியர்களுக்காக அவர்கள் பல வீடுகளைக் கட்டியுள்ளனர். பம்பாய் ராஜ்ய சர்க்கார் தொழில்துறை ஊழியர்களில் மேற்பார்வை சிப்பந்திப் பிரிவினருக்காக பம்பாயில் கட்டியுள்ள பல அடுக்குகளைக்கொண்ட நவீன கட்டடங்களைப் படத்தில் காணலாம்.

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடுஅச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.

உ

# செட்டிநாடு

வார இதழ்

மலர்-25 இதழ்-39

துன்முகி-ஆனி-29

12-7-56

வியாழன் வெளியீடு

தேவகோட்டை

ஆண்டுச்சந்தா ரூ 4

வெளிநாடு ரூ 7

ஆசிரியர்:- பாலகவி இராமநாதன்செட்டியார்

# நற்றிணை - தெளிவுரை

## நெய்தல்

தலைவன் குறைநீக்கப் பெருனுய்ச் செல்லுகின்றவனை ஆற்றுவிக்கக் கருதிய தோழி, புதியனவாகிய சிலமொழிகளை அமைத்துக்கொண்டு புனைந்து கூறியது.

வண்ட றைஇயும் வருதிரை யுதைத்துங், குன்றோம்பு வெண்மணற் கோடியடும்பு கொய்துந், துனியி னன்மொழி யினிய கூறியுஞ், சோல் லெதிர் பெறுஅ யாகி மெல்லச், செலீஇய செல்லு மோலியிரும் பரப்ப. வுமணர் தந்த வுப்புநோடை நெல்லி, னயினி மாவின் றருந்த நீவிக், கணநாறு பெருந்தோடை புரளு மார்பிற், றுணையிலே தமியை சேக் குவை யல்லே, நேர்கட் சிறுதடி நீரின் மாற்றி, வானம் வேண்டா வுழவினெங், கானலஞ் சிறுகுடிச் சேர்ந்தனை செலினே 254

:உலோச்சனூர்

பகற்பொழுதில் வண்டல்மண்ணை வீடுபோலச் சமைத்தும், கரையை நோக்கி வருகின்ற அலையை உதைத்தும் மலைபோலுயர்ந்த வெளிய மணல்மேட்டிலேயுள்ள கொடியடும்பின் பூவைப் பறித்தும் வருத்தமற்ற நல்ல இனிய சொற்களைச் சொல்லியும், அச்சொல்லுக்கு விடைபெருயாகி மெல்ல உன் ஊர்க்குப் போதற்குச் செல்லுகின்ற ஒலிக்கும் பெரிய கடற்பரப்பினையுடைய தலைவனே! நேர்மையான இடத்தையுடைய உப்புப் பாத்தியில் கடல் நீரைப் பாய்ச்சி விளைவித்துக்கொள்வதன்றி, மழை வேண்டாத வேளாண்மையையுடைய கானற்சோலை சூழ்ந்த எமது சிறுகுடியின்கண் இராப்பொழுதில் தங்கிச்செல்லுவாயானல் உப்பு வணிகரிடம் உப்பு விலையாகப்பெற்ற நெல்லைக்குற்றி ஆக்கிய அரிசிக்காணத்தை உனது குதிரை உண்ண, மலர்க்கூட்டம் மணங்கமழும் பெரிய பூமாலை புரளுகின்ற மார்பிலணைக்குந் துணையின்றித் தனியே துஞ்சுவாயல்லை.

பாலகவி

# பசுந்தமிழ் மலர்

பாலகவி

நன்றி யறிதல் பொறையுடைமை யின்சொல்லோ
டின்னாத வெவ்வுயிர்க்கும் செய்யாமை கல்வியோ
டொப்புர வாற்ற வறித லறிவுடைமை
நல்லினத் தாரோடு நட்ட லிவையெட்டும்
சொல்லிய வாசார வித்து. :-ஆசாரக்கோவை-1

உரை:-'நன்றி அறிதல் - ஒருவர் செய்த உதவியை மினைவு கூர்தலும், பொறை உடைமை-பிறர் செய்த குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளுதலும், இன்சொல்லோடு-இனிய சொல்லைச் சொல்லுதலும், எவ்வுயிர்க்கும் இன்னாத செய்யாமை-எந்த உயிர்களுக்கும் துன்பந்தரத்தக்க செயலைச் செய்யாமையும், கல்வியோடு - கல்வியுடைமையும், ஒப்புரவு ஆற்ற அறிதல் உலகநடையை நன்றாக அறிதலும், அறிவுடைமை - அறிவுடைமையும், நல் இனத்தாரோடு நட்டல்-நல்ல கூட்டத்தாரோடு நட்புக் கொள்ளுதலுமாகிய, இவை எட்டும்-இந்த எட்டுக் குணங்களும், சொல்லிய - சொல்லப்பெற்ற, ஆசார வித்து-ஆசாரத்திற்கு வித்தாயமைந்தனவாம்'' என்பதாகும்.

சங்கமருவிய நூல்களை மேற்கணக்கு நூல்களென்றும், கீழ்க்கணக்கு நூல்களென்றும் இருவகையாகக் கூறுவர். அவை ஒவ்வொன்றும் பதினெட்டு என்ற எண்ணிக்கையில் அமைந்துள்ளன. திருமுருகாற்றுப்படை முதலாகவுள்ள பத்துப்பாட்டும் நற்றிணை முதலாகவுள்ள எட்டுத்தொகையும் மேற்கணக்கு நூல்களாம். நாலடியார் முதலாகவுள்ள பதினெட்டும் கீழ்க்கணக்கு நூல்களாம்.

கீழ்க்கணக்கு நூல்களுள் அகப்பொருள் பற்றியன சிலவும்

உள்ளன. புறப்பொருள் நூல்களுள் ஆசாரக்கோவையும்ஒன்று. இதனை இயற்றிய ஆசிரியர் பெருவாயின் முள்ளியார். இதிலுள்ள பாடற்றொகை நூற்றொன்று. அவற்றுள் ஒன்று தற்சிறப்புப் பாயிரம்.

பாண்டிநாட்டில் இருந்த சங்கங்கள் மூன்று. அவைமுதற்சங்கம்,இடைச்சங்கம்கடைச்சங்கம் எனஅழைக்கப்பெற்றன. கடைச்சங்கத்திலிருந்து தமிழாராய்ந்தவர், நக்கீரர்முதலிய நாற்பத்தொன்பது புலவர். அவருள்ளிட்ட நானூற்றுநாற்பத்தொன்பதின்மர் பாடினரெனவும், அவர்களாற் பாடப்பட்டன நெடுந்தொகை முதலாயின எனவும் இறையனார் களவியலுரை கூறும்.

கடைச்சங்கப் புலவர்களாற் பாடப்பெற்ற கீழ்க்கணக்கு நூல்கள் அனைத்தும் மக்களுக்கு வேண்டிய அறம், பொருள், இன்பம் ஆகிய உறுதிப்பொருள்களை உணர்த்துவனவாய், அவற்றை அடைதற்குரிய ஒழுகலாறுகளை அறிவிப்பனவாய் அமைந்துள்ளன.

கீழ்க்கணக்கு நூலுக்கு இலக்கணம் கூறவந்த பன்னிரு பாட்டியல் 'அடிநிமிர்வில்லாச் செய்யுட் டொகுதி, அறம் பொருள் இன்பம் அடுக்கி யவ்வகைத், திறம்பட வுரைப்பது கீழ்க்கணக்காகும்' என்று அறிவிக்கின்றது. 'அடிநிமிர் வில்லாமை'யை ஐந்தடியின் எருமை எனத் தொல்காப்பிய உரையாசிரியர் உணர்த்துவார். இரண்டடி முதல் ஐந்தடி வரையுள்ள செய்யுட்களை உடையன, பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் என்பது நாமறிந்ததே.

கீழ்க்கணக்கு நூல்களுள் அறத்தை முதன்மையாகக் கொண்டு விளங்குவன நாலடியார், நான்மணிக்கடிகை, இனியது நாற்பது, இன்னாநாற்பது, முப்பால், திரிகடுகம், ஆசாரக்கோவை, பழமொழி, சிறுபஞ்சமூலம், முதுமொழிக் காஞ்சி, ஏலாதி என்ற பதினொன்றுமாம். பொருளைத் தலைமையாகக் கொண்டு இயலுவது களவழி நாற்பது, இன்பத்தைச் சிறப்பாகக்கொண்டு திகழ்வன கார்நாற்பது, திணைமொழி யைம்பது, ஐந்திணையைம்பது, ஐந்திணையெழுபது, திணைமாலை நூற்றைம்பது, கைந்நிலை என்னும் ஆறுமாம்.

அறத்தை முதன்மையாகக் கொண்டு இயலுகின்ற நூல்க

ளில் ஆசாரக்கோவை முன்ன ணியிற் கற்கவேண்டியவொன் ருகும். முன்னாட்களில் தமிழ் கற்பிக்கும் ஆசிரியர்கள் பள்ளி யிளஞ் சிறுர்களுக்குப் பாடமா கப் பயிற்ற எடுத்துக்கொள் ளும் நூல்களில், ஆசாரக் கோவை உறுதியாக இருந்தே தீரும்.

மற்றைத் தமிழ்நூல்களனைத் தும் ஆசாரத்தை ஒழுக்க மெனப் பொதுப்படச் கூறிச் சென்றன. இந்நாலொன்றே அதனைச் சிறப்பு வகையாற்கூறு கின்றது. உண்ணுலும் உறங்க லும், மலசலங் கழித்தல், நீரா டுதல் முதலிய நித்தியக் கடன்க ளும், ஐம்பெருங் குரவர்பால் ஒழுகுதலும் முதலியனவற் றைஇந்நூல் முறைப்படுத்தி யுரைப்பதுபோல் வேறு எந் நூலும் உரைப்பதாகத் தெரிய வில்லை.

இந்நூலாசிரியராகிய பெரு வாயின் முள்ளியார். சிறந்த சிவபத்தரென்பதைச் சிறப்புப் பாயிரம் அறிவிக்கின்றது திரி புரமெரித்த விரிசடைக் கடவு ளைத் தொழுது இருடிகளது நூல்களிற் கூறப்பெற்றுள்ள ஆசாரங்களைத் திரட்டி ஆசாரக் கோவைஎன்னும்பெயரில்நூலைச் செய்ததாகத் தற்சிறப்புப் பாயி ரத்தில் ஆசிரியர் அறிவிக்கிருர். வைதிக சமயத்தைத் தழுவிய வராய் ஸ்மிருதிகள் என்று சொல்லப்பெறும் வடமொழியற நூல்களில் நல்ல பயிற்சியுள்ளவ ராய் இவ்வாசிரியர் விளங்கினுரெ ன்பதைஇந்நூல்தெரிவிக்கின்றது

காரியத்திற்குக் காரணம் மூல மாயிருப்பதால், காரணமின்றிக் காரியம் நிகழுவதில்லை. மரத் திற்கு வித்து மூலமாயிருப்ப தால் வித்தின்றி மரமுண்டாவ தில்லை என்பதை அனைவரும் அறிவர். ஆசாரம் என்று சொல் லப்பெறுகின்ற நல்லொழுக்கங்க ளாகிய காரியங்களுக்கு, நற் பண்புகளென்ற காரணங்கள் அடிப்படைகளாயிருக்கின்றன. அந் நற்பண்புகளில்லாதவர்கள் பால், நல்லொழுக்கங்கள் நிகழ இடமிராது.

எனவேதான், ஆசாரத்திற்கு வித்தாக அமைகின்ற நற்பண்பு கள் எட்டினை முதற் பாடலில் ஆசிரியர் எடுத்துக் கூறினுர், அவ்வெட்டினுள்ளும் தலைசிறந் தது நன்றியறிதலாகும். 'எந் நன்றி கொன்ருர்க்கு முய் வுண்டா முய்வில்லை,செய்ந்நன்றி கொன்ற மகற்கு' என்பது திருக் குறள். இதற்கு விரிவுரையாகப்

புறநானூற்றுப் பாடலொன்று அமைந்திருக்கின்றது,

ஆன்முலை அறுத்தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும் குரவர்த் தப்புதலும் முதலிய கொடுமைகளைவிடச் செய்ந்நன்றி கொல்லுதல் கொடியதும் கழுவாயில்லாததுமாகுமென்பது அப்பாடலின் கருத்து. மனிதன் செய்கின்ற செயல்கள் இரண்டு வகைகளில் நிகழுகின்றன. ஒன்று; அறிவுக்கு வந்து செய்வது. மற்றொன்று அறிவுக்கு வாராது செய்வது.

மேலே சொல்லிய ஆன்முலையறுத்தல் முதலியவற்றை ஒருவன் அறிவுக்கு வாராத நிலையிலும் செய்து விடுதல் கூடும். உயிர்களின்பால் வைத்த இரக்கத்தையே உருவாகக் கொண்டு வாழ்பவனுங்கூடப் பிறிதொரு பயன்கருதிச் செலுத்திய கத்தியால் ஆன்முலையறுக்கும் செயலைச்செய்து விடுதலும் உண்டு. கொடிய விலங்கென்று நினைத்து அதைக்கொல்ல விடுத்த தசரதனின் அம்பு அந்தணச் சிறுவனின் உயிரைக் குடித்த வரலாறு இங்கே நினைவுகொள்ளத் தக்கதாகும்.

இவ்வாறு அறிந்தும்-அறியாதும் செய்யத்தக்கனவாக மற்ற மறச்செயல்கள் அனைத்தும் இருக்க அறிந்தே செய்யத்தக்கதாகச் செய்ந்நன்றி மறத்தல் இருப்பதனாலேயே அது, மிகக் கொடியதாகக் கூறப்பெற்றது. எனவே, மறச்செயல்களுள் முதலிடம் பெறுவதாகிய செய்ந்நன்றி மறத்தலையுடையவன் மனிதப் பண்பற்றவன் என்பது இங்கே முதலில் உணர்த்தப் பெற்றது.

குற்றம் பார்க்கில் சுற்றமில்லை' என்பது ஔவையார் திருவாக்கு, பிறர் குற்றத்தைக் காணும்பொழுதுதான் சினம் உண்டாகின்றது. சினத்திற்குச் சேர்ந்தாரைக் கொல்லி என்று பெயர் சூட்டுவார் திருவள்ளுவர். அகழ்வாரைத் தாங்கும் நிலம்போலத் தம்மை இகழ்வாரையும் பொறுத்தலே தலையாயதாதலின் பொறை நன்றியறிதலின் பின்னே வைக்கப் பெற்றது.

இன்சொல்லால் சாதித்துக் கொள்ளமுடியாத எந்தப் பயனும் உலகத்திலில்லை. 'இனிய உளவாக இன்னாத கூறல், கனியிருப்பக் காய்கவர்ந் தற்று' என்பது திருக்குறள். இரக்கமில்லாதவரிடத்தே இன்சொல் இருந்

(12ம்பக்கம் பார்க்க)

# சைவாலயங்களில் சம்ஸ்கிருத அர்ச்சனையே வேண்டும்.

சித்தாந்தபண்டித பூஷணம் ஆ. ஈசுரமூர்த்திப்பிள்ளை

(முன் தொடர்ச்சி)

அன்றியும் அதனால் இராசாங்கத் தமர்ந்த வைதிக சைவஞ் சாகுமானால் அன்று சனசமூகத்தையே குழிதோண்டிப்புதைக்க வேண்டியதுதானென்பதும் யூகித்துக்கொளப்படும். சைவஞ் சாகிறதென்பதும் அச்சமயத்தைத் திறம்படக் கல்லாமையே. நவீனர் அத்தகையினர். ஆகலின் அவர் கலவியிற் புகுந்தனர். எப்படி? 'கருத்துலக்குக் கலப்படத்தினால் உண்டாகும் தாழ்ச்சியை ஈடுசெய்வது என்பதுமுடியாத காரியம். இது ஒரு சமுதாயத்தின் வாழ்வையே பாதிக்கும்... இன்றைய சமுதாயம் நஞ்சான கருத்துக்களைத்தான் அதிகம் ஏற்றுக்கொள்கின்றது. காரணம் அவைகள் நஞ்சானவை என்று உணரத் திறன் இல்லாத காரணத்தால்தான்' (2-9-55 தமிழ்நாடு) என்கிறாரவர். சமயங்களெல்லாங் கருத்துலகுக் குரியன. அவற்றைக் கலவை செய்வது மன்னிக்க முடியாத குற்றம். ஆனால் அவருக்கோ அவர் வாயில் வந்தனவெல்லாஞ் சைவந்தான். 'ஆன்மா இறைவனது அம்சம்', 'ஒவ்வொருவரும் பரம்பொருளின் அம்சம்' (23-7-55 தமிழ்நாடு) என்கிறாரவர். பதிஅமிசியும், பசு அமிசமுமாமென்பது சைவசித்தாந்தமா? 'உலகம் ஆண்டவனுக்கு ஒரு திருமேனி. ஆண்டவன் மேனியாகிய உலகத்தில் ஏதாவது ஒரு பாகத்தில் ஒரு இன்னலோ...கஷ்டமோ---இருந்தால் அது ஆண்டவனின் திருமேனி முழுவதையும்தானே பாதிக்கும். ஆண்டவன் பாதிக்கப்படுவதை நாம் அகற்றுவது ஆண்டவனுக்குச்செய்த சேவை தானே' (12-9-55 தினமணி) என்கிறாரவர். உலகம் ஆண்டவனுக்குத் திருமேனி யென்பது சைவ சித்தாந்தமே, ஆனால் அதற்கவர் கொண்ட கருத்து அபத்தம். திருமேனியெனஅவர் சொல்வது சடத்தொகுதியா? உடம்போடு கூடிய உயிர்த்தொகுதியா? சடத்தொகுதியை அவர் சொல்லார். அது அவ்வுயிர்களுக்காகவேயிருக்கிறது. அதை வெட்டலாம், சுடலாம், அன்ன பிறவுஞ்செய்யலாம். ஆகலின்

அவ்வுலகம் அவ்வுயிர்த்தொகுதியாய்த்தானிருக்கும். அதனை ஆண்டவனின் திருமேனியென்பதும் அமிசமென்பதும் சரியா? மேனியும் அமிசமும் ஒன்றுகா. அவ் வாக்கியத்திலுள்ள 'ஒரு பாகம்' என்பது ஒருயிர் அல்லது சிலவுயிர்களா. 'மேனி முழுதும்' என்பது எல்லாவுயிர்களும். உடம்பு பாதிக்கப்பட்டால் அதிலுள்ள உயிர் துன்புறுதற்கு அவ்வுடம்பில் அவ்வுயிர் தோய்ந்திருப்பதே காரணம். ஆனால் ஆண்டவன் எந்தவுயிரிலுந் தோயாதவன். அதனால் எந்தவுயிர் பாதிக்கப்பட்டாலும் அவன் பாதகமுறுன். மேலும் பெருமழை, மிகுவெள்ளம், நிலநடுக்கம், இடிவீழ்ச்சி முதலியவற்றால் லக்ஷோபலக்ஷம் பேர்களைக் கொன்றுங் குற்றுயிராக்கியுங் குவிக்கிறான். தான் பாதகமுறுவதுண்மையானால் அதனை யவன் செய்யான். இன்னும் அவர் சொல்லுகிறபடி. அவனுக்கு அவை திருமேனியானால் அவற்றைப் பாதகமுறாமல் காத்துக்கொள்ளும் பொறுப்பு அவனுக்கேயுண்டு. அவற்றால் பாதகத்திலிருந்து அவனை விடுவிக்க முடியாது. அவனை நோக்கிவரும் பாதகம் அவற்றிற்கே யாம். சொக்கர் பட்டதை நினைக. அவற்றை நோக்கிவரும் பாதகமும் அவற்றிற்கே யாம். நவீனர்தாம் நாள்தோறும் படுவதைஓர்க. சைவத்தில் அவர்செய்யுங் கருத்துக் கலவை இப்படிப்பலவுண்டு ஆகலின் போலிச்சைவத்தை வளர்ப்பவர் அவரே. மயிலைப் பழிக்கும் வான்கோழி போல் அக்காலையாசரை அவர் பழித்து மகிழ்ந்தார்.

'சைவமும் வைணவமும் தமிழகத்திற்கு இருகண்கள் போன்றவை. ஒன்றுக்கொன்று துணையாக இச்சமயங்கள் இருக்கின்றன' (24-10-55 தமிழ்நாடு) என்கிறாரவர். இம்முடிவு சைவத்திலோ வைணவத்திலோ கிடையாது. 'சைவ சமயம் ஏறத்தாழ எட்டாயிரம் ஆண்டுகள் பழமையுடையது' (2-12-55 தமிழ்நாடு) என்பது அவராராய்ச்சி முடிவு. அவ்வளவு பழமை வைணவத்துக்கு மிருந்ததாகஅவர்சொல்லவில்லை. [தொடரும்]

## தங்கம், வெள்ளி

| மதுரை | ஜூலை 10- |
|---|---|
| பாட்லா | 100 8 0 |
| சவரன் | 67 12 0 |
| ரெடிமேட் தங்கம் (சவரன் எடை) | 64 8 0 |
| வெள்ளி 100தோலா | 175 0 0 |
| வெள்ளி 1தோலா | 1 13 0 |

உ
சிவமயம்
பாலரூவாயர் துணை



அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு


# செட்டிநாடு

துன்முகி ஆனி - 29


## காவலரை இழந்தோம்!

மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளைஅவர்களதுசைவப் பெருநலத்தையும் தமிழ்ச் செல்வத்தையும் முறையாகப்பெற்று மகிழ்தற்கு ஒரு வாயிலாக விளங்கியவர்கள் குடந்தைக் குமரசாமிச் செட்டியாரவர்கள். சைவச் செட்டியார்கள் மரபில் கூடலுடையார் கோத்திரத்தில் தோன்றிய இவர்கள் அருட்செல்வ வளத்தால் சிறந்திருந்ததோடு பொருட்செல்வ வளத்தாலும் பொலிந்து விளங்கினார்கள். சைவப் பெருமக்களுக்கும் தமிழ்ப் புலவர்களுக்கும் குடந்தையில் தாயகமாக இருந்தது இவர்கள் இல்லம் என்று சொன்னால் அதை யாரும் மறுக்கமுடியாது.

உலகியலில் சிறந்த அநுபவமும் இவர்களுக்கு இருந்தபடியால் குறிப்புணர்ந்து செலாற்றும்திறமை இயல்பாகவே இவர்கள் பால் அமைந்திருந்தது. யாரிடமும் அன்புடன் பழகி இன்சொல் மொழிந்து தம்பால் எவரது உள்ளத்தையும் ஈர்த்து ஈடுபடும்படிசெய்கின்ற இவர்களது ஆற்றல் இவர்களிடம் மட்டுமே அமைந்ததாகும்

குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டம் தோன்றுவதற்குக் காரணமாயிருந்தவர்களுள் இவர்கள் குறிப்பிடத் தகுந்தவர்கள் ஆவார்கள்

அதனுலே யே அதன் தலைவர் பதவி. அதுதோன்றியநாள் தோட்டு இவர்களை விடாது பற்றிக் கோண்டிருந்தது. இத் திருக்கூட்டத்தின் வாயிலாக இவர்கள் செய்த தோண்டு எத்தனையோ பேர்களுக்கு நல்வாழ்வை வழங்கியதேன்று சோல்லலாம். பல அன்பர்களைச் சமயம் முதலான தீட்சைகள் பெறச் செய்து சிவபூசை புரிந்து வரச்செய்திருக்கிருர்கள்.

மற்றவர்களுக்கு வழி வகுத்துக்கோடுத்துத்தாம்அவ்வழியில்நில்லாமையால்பலர் [நாட்டுக்குக்கேடு சூழ்ந்துவருகிருர்கள்சோல்லும்செயலும் ஒத்துச்சைவ வாழ்வை மேற்கோண்டு சிவபூசை ஆதிய சிறப்புச் செயல்களைக் கைக்கோண்டோழுகி மற்றவர்களுக்கு வழி காட்டியாய்ச் செட்டியாரவர்கள் விளங்கினுர்கள்

அறிவுடையவர்கள் கேட்டுப் பாராட்டும், அருங் கருத்துக்களைச் சோற்போழிவு வாயிலாகப் போது மக்களுக்குஅளித்துவந்த இவர்கள் தனியே இருந்து அளவளாவுபவர்களுக்கும் சாத்திரநுட்பங்களை எளிதில் உணர்த்தும் வன்மை பெற்றவர்களாய் இருந்தார்கள்.

இவர்களது சைவ ஒழுக்கத்தையும் சைவவளர்ச்சியில் ஈடுபாடு கோண்டுள்ள நல்லுள்ளத்தையும் கண்டு இவர்களைச் சைவப்புரவலர் சிவசேனுபதி என்பது போன்ற சிறப்புப் பெயர்களால் சைவ நன்மக்கள் பாராட்டினுர்கள். அணிமையில் மதுரை ஆதீனம் மகா சந்நிதானம் அவர்கள் 'சைவ சித்தாந்தக் காவலர்' என்ற பட்டம் வழங்கியதுஅன்டர்களுக்கு நினைவிருக்கலாம்

சிறந்த கல்வியாளரை - தக்காரைப் பாராட்டும் சான்றேரை- சாத்திரக் கருத்துக்கள் போதிந்த சோற்போழிவாளரை-சைவம் புரந்த தனிப்பெரும் காவலரை நாம் இழந்தோம். நமக்கு வந்த குறையை அறிந்து நிறைவு செய்ய ஆண்டவனை வேண்டுவதன்றி நாம் என்ன செய்யவல்லோம்!

---

# சைவ சித்தாந்தக் காவலர்

சோழநாட்டில் சைவ மரபில் (சோழபுரம்செட்டியார்) குமாரசாமிச்செட்டியார் அவர்கள் 25-12-1889ல் தோன்றினர்கள். இவர் தந்தையார் பெயர் ப தி சோமசுந்தரஞ்செட்டியார். இவருடன் பிறந்தவர்கள் மூன்று தம்பிமார்களும் ஒரு தங்கையும் ஆவர். இவருள் ப தி சோ சிங்காரஞ்செட்டியார் என்ற தம்பியும் தங்கையுமே இப்பொழுது உள்ளனர்.

செட்டியார் அவர்கள் இளமையில் பழைய முறையில் படித்து வந்தவர். அக்காலம் எஸ் எஸ் எல் சி வரை படித்துத் தேறியவர். சென்ற நூற்றுண்டின் முற்பகுதியில் வாழ்ந்த மகா வித்துவான் மீனுக்ஷிசுந்தரம் பிள்ளை அவர்களின் மாணுக்கர்களாகிய பட்டவிருத்தி சபாபதி செட்டியார், உ வெ சாமிநாதஐயர் அவரிடம் பயின்ற தியாகராஜ தேசிகர் இவர்களிடமும் மற்றும் சூரியனுர் கோயில் ஆதினம் முத்துக்குமார தேசிக மகாசந்நிதானம் போன்ருரிடத்தும் முறையே தமிழும் சைவமும் நன்கு பயின்றனர்.

தனது முன்னேர்கள் செய்து வந்த தொழிலாகிய காசுக்கடைத் தொழிலில் மிகவல்லவராக இருந்ததோடு தமிழ் மொழியை நன்கு பயின்று அதோடு சமய உண்மைகளை நன்கு வல்லாரிடத்தில் கேட்டு அறிந்த பெருமை செட்டியார் அவர்களுக்கு உண்டு.

எட்டு ஆண்டுகளுக்கு முன் திருவலஞ்சுழி வெள்ளை விநாயகர் திருமுன் ஏற்பட்ட திருக்குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத்தினருக்குத் தலைவராக இருந்து வாரந்தோறும் (ஞாயிறு) ஒவ்வொரு பாடல் பெற்ற தலங்களுக்குச் சென்று வழிபாடுகள் செய்துவரப்பெருந் துணையாக இருந்தார்கள்.

கும்பகோணம் அரிசிமில் முத்த வெ சொக்கலிங்கஞ்செட்டியார் அவர்களும் பேட்டை நெல்லுக்கடைத்தெரு கே ஆர் எம் சிங்காரஞ்செட்டியார் அவர்களும் கூட்டத்திற்குத் துணைத் தலைவர்களாகவும் மங்களாம்பிகை அச்சகம் திரு எஸ் சிவ குருநாதன் செட்டியார் அவர்கள் செயலாளராகவும் இருந்து செட்டியார் அவர்களிடத்தில் பெருமதிப்புக் கொண்டு

கூட்டத்தினைச் செவ்வனே நடத்திவருகின்றார்கள்.

செட்டியார் அவர்களின் உயரமான தோற்றமும் வெண்ணீறு பூசியநெற்றியும் உருத்திராக்கமணிந்தமார்பும்காண்போர்க்குஅப்பர்பெருமான் நினைவுதோன்றும்படி இருக்கும் மிக்க பொறுமைசாலியாக வாழ்ந்து வந்த இவர்கள் சமயஉண்மைகளை நன்கறிந்தும் அறிந்த பெரியோரிடத்து நன்மதிப்புக்கொண்டும் சிவபூசையில் வல்லவராய்ச் சிவபூசாதுரந்தராய்த் திகழ்ந்தார்கள்,

எந்த நூலையும் நன்கு படித்துப் பிறருக்கு உடனே நுட்பங்களைத் தெளிவுபடுத்தி அந்தஅளவிற்குப் பிறரையும் படித்தவராக ஆக்கிவிடுவார்கள். படிப்பில்ஆர்வம்உள்ள பல ஏழைமாணவர்களுக்கும் புலவர் பெருமக்களுக்கும் சமயச் சொற்பொழிவாளர்களுக்கும் உறுதுணையாகவாழ்ந்த திருமிகு செட்டியார் அவர்கள் சேர்த்து வைத்துள்ள தமிழ் நூல்கள் கிட்டத்தட்ட மூவாயிரம் உள்ளன.

நமது பாலகவி இராமநாதன் செட்டியார் அவர்களிடத்தில் செட்டியார் அவர்களுக்கு நல்ல மதிப்பு உண்டு இத்தகைய செட்டியார் அவர்கள் குடந்தை செட்டிப் புதுத்தெருவில் தனது இல்லத்தில் சென்ற 29-6-56-ம் நாளன்று இறைவனடி சேர்ந்தார்கள். இதனால் சிறப்பாகச் சிவசமய உலகிற்கே ஒரு பெரும் இழப்பு நேர்ந்து விட்டது எனக் கூறவேண்டும்.

செட்டியார் அவர்களின் பிரிவாற்றாது வருந்தும் அன்னாரது உடன்பிறந்தார்க்கும் குடும்பத்தினருக்கும் எங்கள் ஆழ்ந்த வருத்தத்தினைத் தெரிவிப்பதோடுஅன்னாரதுஆன்மா ஆடவல்ல பெருமானது திருவடி நீழலில் தங்கிச் சிவப்பேற்றில் திளைத்து அமைதி பெறுமாறும் எல்லாம் வல்ல அப்பெருமானை இறைஞ்சுகின்றோம்.

திருக்குடந்தைச்சிவனடியார்
திருக்கூட்டத்தினர்

## சிவபதம் அடைந்தார்கள்

கும்பகோணம் கூடலுடையார் கோத்திரம் சைவப் புரவலர் சிவசேனபதி சைவசித்தாந்தக் காவலர் சிவத்திரு, பதி. சோகுமாசாமிச் செட்டியாரவர்கள் 29-6.56 காலை 5 மணிக்குச் சிவபதம் அடைந்தார்கள். அவர்கள் பிரிவு குறித்துச் சைவ உலகம் பெரிதும் வருந்துகின்றது. அவர்களது நல்லுயிர் சிவத்திற் கலந்து இன்புற இறைவனை இறைஞ்சுகின்றோம்.

(5 ம்பக்கத் தொடர்ச்சி)

தாலும் பயனில்லையாதலின், இரக்கத்தின் தொழிற்பாடாகிய இன்னா செய்யாமையை அதன் பின்னே கூறினர்.

விலங்கு பறவை முதலியவற்றிலிருந்து மனிதனைப் பிரித்துச் சிறந்தவனாக ஆக்குவது கல்வியறிவாதலின் 'விலங்கொடு மக்களனைய ரிலங்குநூல், கற்றாரோ டேனை யவர்' என்று திருக்குறள் கூறியது. கல்வியறிவுள்ளவனாயினும் உலக நடையை அறிந்து ஒழுகாதவன் அறிவில்லாதவனே என்பதை 'உலகத்தோ டொட்ட வொழுகல் பலகற்றுங், கல்லாரறிவிலாதார்' என்ற திருவள்ளுவப் பெருந்தகையின் திருவாக்காலறிகின்றோம். அதனாலேயே, கல்வியும் ஒப்புரவாற்ற அறிதலும் அடுத்தடுத்து வைக்கப்பெற்றன.

கல்வியால் வருவது அறிவென்பது உண்மையாயிருக்க, மேலும் அறிவுடைமை கூறப் பெற்றிருப்பதன் உட்கிடைநினைவிலிருத்தத் தக்கது. கல்வியறிவுக்கு அப்பாற்பட்டு, மெய்யுணரும் அறிவே இங்கு அறிவுடைமை என்று குறிக்கப்பெற்றதாகும்.

இவ்வெல்லாப் பண்புகளும் ஒருவனிடத்தில் இயற்கையாக அமைந்து இருந்தாலும் உடன் பழகுகின்ற நட்பாளர்களையொட்டி இவை வலுப்பெறுதலும் அகன்றுவிடுதலும் கூடுமாதலின், இறுதியாக நல்லினத்தாரோடு நட்டலைக் கூறினர் மனிதன் மனிதனாக வாழ்வதற்குரிய அடிப்படையை இவ்வளவு எளிமையாக விளக்கும் இவ்வாசிரியரது திறமைக்கு இணையே இல்லையல்லவா?

---

## வார வழிபாடு

தேசமெல்லாம் புகழ்ந்தாடுங் கச்சித் திருநகர்க்கண் திருவாவடுதுறை ஆதீனக் கிளை மடாலயத்தில் நாற்றெண்பது யாண்டுகளுக்குமுன் கச்சியப்ப முனிவர் தொட்டிக்கலைச் சுப்பிரமணிய முனிவர் முதலிய பன்னிரு மாணவர்களுடன் ஞானவாழ்வு வாழ்ந்து சிவஞான பாடியம், காஞ்சிப்புராணம் முதலிய அரும் பெருஞ் சைவ நூல்களைத் தந்தருளிய துறைசை ஆதினம் மாதவச்சிவஞான சுவாமிகள் வழிபாடாற்றிய மெய்கண்ட தேவநாயனர் திருக்கோயிலில் 1072-வது ஞாயிறு வழிபாட்டை

24-6-56ல் மெய்கண்டார் கழக அன்பர்கள் நடத்தினர். 500க்கு மேற்பட்ட அன்பர்கள் தாய்மார்கள் பள்ளிக்கூட மாணவர்கள், கலந்து கொண்டனர். சிவஞான போதக் கூட்டுப்பிரார்த்தனைக்குப்பின் கழகச் செயலாளர் திரு ஞானசம்பந்த முதலியார் காஞ்சிப்புராண நகரப்படலம் பற்றி நீண்டதோர் சொற்பொழிவாற்றிச் சிவஞான முனிவரின் பெருமைகளையும் காஞ்சிப் புராணத்தின் நகரப்படலம்சித்தாந்த சாத்திரச் கருத்துக்களுடன் விளங்குகின்ற நலத்தையும் விரிவாக எடுத்துக் கூறினர். நன்றி கூறலுடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

## உங்களுக்குத் தெரியுமா?

இந்தியாவில் அலுமினிய உற்பத்தி 1954ல் 4,886 டன்னாக இருந்தது, 1955ல் 7,245 டன்னாக அதிகரித்தது.

1954-55ல் இந்திய சணல் பொருள்களின் ஏற்றுமதி 8.51 லட்சம் டன்னாக உச்ச அளவை எட்டியது. 1953-54ல் ஏற்றுமதி 7.92 லட்சம் டன்

புனர்வாழ்விப்பு நிதி நிர்வாக ஸ்தாபனம் இடம்பெயர்ந்து வந்துள்ளவர்களுக்குக் கடன் தொகைகள் வழங்குவதற்காக 1956 எப்ரல் 30ந்தேதி வரை மொத்தம் 1257.48 லட்சம் ரூபாய் அனுமதித்துள்ளது.

கூட்டுறவு அடிப்படையில் வேலைசெய்துவருகிற கைத்தறி நெசவாளர்கள் இன்னும் அதிக லாபகரமான உற்பத்தி முறையைக் கையாளும் பொருட்டு 1956-58 காலஅளவில் 35,000 விசைத்தறிகள் உபயோகத்துக்குக்கொண்டுவரப்படும்.

அஸ்ஸாம், மத்திய பாரத், கட்ச் ஆகிய ராஜ்யங்களில் ரஸ்தா அபிவிருத்திக்கு இந்திய சர்க்கார் 22.48 லட்சம் ரூபாய் அனுமதித்துள்ளனர்.

இந்தியா 1954ல் 102 கோடி ரூபாய் மதிப்புள்ள கனிஜப் பொருள்களை உற்பத்தி செய்தது.

புதிய தொழில்முறை ஸ்தாபனங்களை நிறுவுவதற்காக 1955-56ல் 164 லைசென்சுகள் கொடுக்கப்பட்டன, முந்திய வருஷத்தில் 110லைசென்சுகள் கொடுக்கப்பட்டன




திருத்தொண்டர் புராணத்துள் முருகன்: கோவை-வழக்கறிஞர்-சிவக்கவிமணி-திருமுறை ஞான பானு திரு சி கே சுப்பிரமணிய முதலியார் பிஎ அவர்கள் 2-9-53ல் திருச்செந்தூர்க்கோயி லில் ஆற்றிய சொற்பொழிவு. விலை அணா4, பதினோராந் திருமுறை ஆசிரியராகிய நக்கீர தேவநாயனரைப் பின்பற்றிப், பன்னிரண்டாந் திருமுறையாசி ரியராகிய சேக்கிழார் பெருமான் முருகப்பெருமானை நினை வூட்டுகிறாரென்னும் உண் மையை இந்நூல் தெளிவுறுத்து கிறது.

## பாரதி தமிழ்ச் சங்கம்

கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ்வளர்க்கும் பணியில் ஈடு பட்டுள்ள 'ராமகதாரத்னம்' கோவை திரு வி தியாகராஜன் தமது 108வது கம்பராமாயணச் சொற்பொழிவினை கல்கத்தா பாரதி தமிழ்ச்சங்கத்தில் கடந்த இரண்டு வாரங்களாக நிகழ்த்தி 24-6,56 அன்று இரவு இராக வன் திருமுடி சூட்டி விழாவு டன் இனிது நிறைவேற்றினர்.

சுவாமி சிவாநந்தர், டாக்டர் சி பி, கொச்சி மாநிலமன்னர் மற் றும் பலர் அனுப்பியிருந்த வாழ்த்துச் செய்திகளை திரு ஆர் கிருஷ்ணன் வாசித்தார். சங்கத்தின் சார்பில் திரு எஸ் சுப்பிரமணியம் புத்தாடை, பண முடிப்பு இவற்றை வழங்கி நாடு பலதுறைகளிலும் சிறந்து கம்பர் கண்ட வளநாடாகவேண் டும்என்று குறிப்பிட்டார்.

திருவாளர்கள் எஸ் வெங்கு சாமி, ஆ சு கிருஷ்ணன், ப ந தியாகராஜன் ஆகியோர்பாராட் டிப்பேசினர். கவிஞர்கள் அரங்க சீனிவாசன், வங்கத் தமிழன், ஆங்கரை ஜெயராமன் முதலி யோர் பாமாலை சூட்டினர்.

கடைசியில் திரு வி தியாக ராஜன் பேசுகையில் '108-வது தடவை நடத்தும இச் சொற் பொழிவு மகாகவி பாரதியின் சங்கத்தில் நடைபெறுவதுதனக் குக்கிடைத்த பேறு என்றும், சுவாமி சிவானந்தா அவர்களின் ஆணைப்படி மீண்டும் மற்றொரு முறை 108 கம்பராமாயணச் சொற்பொழிவுகளைத் துவங்கப் போவதாகவும்' குறிப்பிட்டார்.

### திருப்பாற்றுறை

திருஞானசம்பந்த மூர்த்திகளது திருப்பதிகம் பெற்றதும், திருச்சிராப்பள்ளி காவேரிப் பாலத்துக்கும் திருவானைக்காவலுக்கும் இடையில் கிழக்கே செல்லும் கற்சாலையில் காலரைமைல் தூரத்திலும் திருவெறும்பூர் ரயில் நிலையத்திலிருந்து 4மைல் தூரத்திலுமுள்ளதுமான திருப்பாற்றுறை ஸ்ரீ கல்யாணி அம்பாள் சமேத ஸ்ரீ ஆதிமூலநாத சுவாமி கோயில் ஜீர்ணோத்தாரண அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் துன்முகி- ஆனி - 28, 11-7-56 காலை 9 மணிக்குமேல் $10\frac{1}{2}$ மணிக்குள் நிகழ்ந்தது. 8-7-56 உதயாதி நாழிகை $1\frac{1}{2}$க்கு மேல் கடஸ்தாபனமும், 11-7-56 மாலை மகாபிடேகமும் இரவு பஞ்சமூர்த்திகள் திருவுலாக் காட்சியும் நடைபெற்றன.

## "சந்தா-நேயர்களுக்கு"

அன்புடையீர்!

நமது இதழின் உறுப்பினர்களில் சந்தாப் பாக்கி உள்ளவர்களுக்கு 2-7-56ல் கார்டுகள் எழுதியிருக்கிறோம். ஒருசில அன்பர்கள் நீண்ட நாளான பாக்கியையும் உடையவர்களாயிருக்கிறார்கள். அன்பர்களின் ஆதரவே பத்திரிகையின் நல்வாழ்விற்குத் துணைசெய்வதென்பதைத் தெரிவித்துப் பாக்கிதார்களை வரும் பாக்கிகளை உடனே அனுப்பியுதவும்படி வேண்டுகிறோம்.

அன்புள்ள,
அமைச்சர்

ஆசிரியர் பாலகவி இராமநாதன் செட்டியாரால் தேவகோட்டை செட்டிநாடு அச்சகத்தில் அச்சியற்றி வெளியிடப்பெற்றது.